KALKI 11.8.2002
ரூ. 6.00

# கல்கி



## துணையா? தொல்லையா?

வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும்

# சங்க இலக்கியங்கள்

(மூலமும் உரையும்)

## 15 தொகுதிகள் விலை ரூ. 1500.00

## சலுகை விலை ரூ.750.00

**எட்டுத் தொகை**

1. நற்றிணை
2. குறுந்தொகை
3. ஐங்குறுநூறு
4. பதிற்றுப்பத்து
5. பரிபாடல்
6. கலித்தொகை
7. அகநானூறு
8. புறநானூறு

**பத்துப்பாட்டு**

9. திருமுருகாற்றுப்படை
10. பொருநராற்றுப்படை
11. சிறுபாணாற்றுப்படை
12. பெரும்பாணாற்றுப்படை
13. முல்லைப்பாட்டு
14. மதுரைக் காஞ்சி
15. நெடுநல்வாடை
16. குறிஞ்சிப்பாட்டு
17. பட்டினப்பாலை
18. மலைபடுகடாம்

**மேற்கண்ட 18 நூல்களை 15 தொகுதிகளாக அமைத்துள்ளோம்.**

**தபாலில்,** பெறக் கடிதம் எழுதுக. 15 தொகுதிகளையும் V.P.P. யில் இரு பார்சல்களாக அனுப்புகிறோம். நூல்களின் சலுகை விலை ரூ.**750** +தபால் மற்றும் கட்டுச் செலவு (இரு பார்சல்களுக்கும்) ரூ.75 சேர்த்து ரூ. **825** மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

**நேரில்,** ரூ **750** மட்டும் செலுத்தி 15 தொகுதிகளையும் உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை. இடைவேளையின்றி. ஞாயிறு மற்றும் தமிழக அரசு விடுமுறை நாட்களில் விற்பனை இல்லை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி :

**வர்த்தமானன் பதிப்பகம்**

15, சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை- 17.

(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்) ☎ : 435 0561.

**இச்சலுகை 27.8.2002 வரை மட்டுமே !**

# ஸ்டார்ட், ஆக்ஷன், ரெய்ட்!













● நவீன்

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# ஊருக்கு விருது!

'மரண தண்டனை அவசியமா? இல்லையா?' என்ற சர்ச்சை உலகமெங்கும் நடந்து கொண்டிருக்கிறது. அறுபதுக்கும் அதிகமான உலக நாடுகள், மரண தண்டனையைத் தடை செய்து விட்டன. ஆனால், இந்த வருடம், இதே விஷயம்தான் சிறந்த தமிழ்ப் படத்துக்கான தேசிய விருதை 'ஊருக்கு நூறு பேர்' படத்துக்கும், சிறந்த இயக்குனருக்கான விருதை எடிட்டர் - இயக்குனர் பி. லெனினுக்கும் பெற்றுத் தந்திருக்கிறது.



ஜெயகாந்தனின் 'ஊருக்கு நூறு பேர்' கதையை, லெனின் தொண்ணூறு நிமிட திரைப்படமாக்கியிருக்கிறார்.

அரை செஞ்சுரி கண்ட ஆனந்தா பிக்சர்ஸ் நிறுவனம் இருநூறுக்கும் அதிகமான படங்களுக்கு பைனான்ஸ் செய்திருக்கிறது. ஐந்நூறு படங்களுக்கு மேல் வினியோகித்திருக்கிறது. . ஆனால் 'ஊருக்கு நூறு பேர்'தான் இவர்களது முதல் தயாரிப்பு. முதல் படமே தேசிய அளவில் விருது வாங்கிக் கொடுத்துள்ளது பெருமைக்குரிய விஷயம் என்கிறார் தயாரிப்பாளர் சுரேஷ்.

"நான் ஏற்கெனவே, லெனின் இயக்கிய படங்களைப் பார்த்து வியந்திருக்கிறேன். அவர் ஒரு நாள், 'ஊருக்கு நூறு பேர்' கதைச் சுருக்கத்தை என்னிடம் சொன்னார். ரொம்ப பிடித்திருந்தது. ஜெயகாந்தனின் நாவலையும் என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார். படித்துக் கொண்டிருக்கும் போதே ஊருக்கு நூறு பேர் படத்தைத்







தயாரிப்பது என்று முடிவு செய்து விட்டேன்.

கமர்ஷியல் நோக்குடன் எடுக்கப்படும் படங்கள்கூட, போட்ட பணத்தைச் சம்பாதிக்குமோ என்கிற நிச்சய விழாவில் முதல்படமாக, திரையிடப்பட்டது. ஜெர்மனியில் நடந்த திரைப்பட விழாவில் பங்கேற்றது. இனி தொடர்ந்து லாஸ் ஏஞ்சல்ஸ் நியூயார்க், லாஸ் வேகாஸ், பிரான்ஸ் இங்கெல்லாம் நடக்கவிருக்கும் திரைப்பட விழாக்களில் திரையிடப்படவிருக்கிறது. இதெல்லாம் 'ஊருக்கு நூறு பேர்' படத்தின் கூடுதல் சிறப்பு.

படத்தின் கதை என்ன?

'ஊருக்கு நூறு பேர்' என்பது ஒரு புரட்சி அமைப்பு. அதைச் சேர்ந்த பாலன், கொள்ளையடித்து, இயக்கத்துக்குத் தேவையான பணம் சேர்க்கிறான். ஒரு கோவிலில் கொள்ளையடிக்கிறபோது, எதிர்பாராதவிதமாக, கோவில் குருக்களைக் கொன்றுவிடுகிறான்.

மற்ற சூழ்நிலை இன்று நிலவுகிறது. அப்படிப்பட்ட நிலையில், அவார்டுக்குத் தகுதியான வகையில் படம் எடுக்கும் துணிச்சல் எப்படி வந்தது?

"நான் விநியோகம் செய்த படங்களில் பெரும் வெற்றி பெறும் என்று எதிர்பார்த்தவைகூட, படுதோல்வி அடைந்து, பல லட்சம் நஷ்டப்பட்டது உண்டு. எனவே எல்லா படங்களிலுமே ரிஸ்க் உண்டு. 'ஊருக்கு நூறு பேர்' போன்ற நல்ல படத்தை, குறைந்த பட்ஜெட்டில் எடுக்கிறபோது, திருப்தி ஏற்படுகிறது. விருது கிடைக்கிறபோது பேரும், புகழும் வருகிறது. அந்த அங்கீகாரத்தின் காரணமாக, தூர்தர்ஷன் முதலியவற்றில் ஒளிபரப்பாகிறபோது பாதி பணம் வரை திரும்ப வந்துவிடும். உலகளாவிய மார்க்கெட்டிலும் விற்பனை சாத்தியம் உண்டு. இவற்றையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டுதான், தயாரித்தேன். குறி தப்பவில்லை." என்றார் பெருமிதம் பொங்க.

சென்ற வருடம், இந்திய திரைப்பட



• லெனின்



• சுரேஷ்

பாலனுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டாலும், இறந்த குருக்களின் மனைவி, "என் கணவருக்கு விதித்த மரணத்தை யாரால் நிறுத்த முடியும்? அவரது மரணம் உன் கையால் நிகழ வேண்டும் என்று விதி இருக்கிறபோது, உன்னைத் தண்டிப்பது என்ன நியாயம்?" என்று தத்துவார்த்தமாகக் கேட்கிறார்.

பாலன் தவிர, புரட்சிப் பத்திரிகையாளர் ஆனந்தன் பாத்திரமும் பார்வையாளனைப் பாதிக்கும். படத்தின் கேமராமேன், அல்போன்ஸ் ராய். 'நேஷனல் ஜியோகிராபிக்' போன்ற சேனல்களுக்கு நிறைய டாகுமெண்டரி படங்கள் எடுத்துள்ள இவருக்கு இது முதல் தமிழ்ப்படம்.

— மௌலி





# பாபா பேசாகலை!




"இமயமலைக்கு டிக்கெட் வாங்கச் சொன்னா, 'பாபி' படத்துக்கு டிக்கெட் வாங்கியிருக்கியேப்பா!"



"இருபது கிலோ அரிசியா...தோ... வாங்கிட்டு வந்துடறேன்."





"ஒட்டு மொத்த தமிழ்நாடும் 'பாபா' பாக்கெட்டுக்குள்ளேதான்!"



'இதயம் காப்போம் திட்டத்தைப் பத்திப் பேசலாம்னு கூப்பிட்டா சலிச்சுக் கறீங்களே!"

— அனு

# அப்படியே கொஞ்சம் மூளை!



• நீங்கள் எங்காவது காரில் போய்க் கொண்டிருக்கும்போது போலீஸ்காரர் யாராவது நிறுத்தச் சொன்னால் நிறுத்தித் தொலையுங்கள். இல்லையென்றால் கழுத்தில் குண்டடிப்பட்டுச் சாவீர்கள் - ஆக்ராவின் மருத்துவக்கல்லூரி மாணவி சோனாலி போஸ் கொல்லப்பட்டது போல.

சென்ற வாரம் இந்தப் பரிதாபத்துக்குரிய பெண், ஆக்ராவின் எஸ்என். மருத்துவக் கல்லூரியில் தன்னுடன் பயிலும் தோழியுடன் மதுராவில் உணவருந்தி விட்டு, கல்லூரிக்குத் திரும்பும் வழியில் சில போலீஸ்காரர்கள் காரை நிறுத்தச் சொல்லி சைகை காட்டியிருக்கிறார்கள். பேச்சு சுவாரஸ்யத்தில் காரை நிறுத்தாமல் சென்றிருக்கிறார் சோனாலி. கறுகறுப்புக்கும் விழிப்புணர்வுக்கும் பெயர் போன அந்தக் காவலர்கள், சோனாலியைத் தப்பித்து ஓடிப் போகும் தீவிரவாதி என்று நினைத்து எதுவும் யோசிக்காமல் சுட்டிருக்கிறார்கள். கழுத்தில் குண்டு பாய்ந்து அந்த வருங்கால மருத்துவர் அந்த இடத்திலேயே இறந்துவிட்டார்.

சோனாலி படித்த அந்தக் கல்லூரியே இப்போது அல்லோல கல்லோலப் பட்டுக் கொண்டிருக்கிறது. ஒரு சில தற்காலிகப் பணி நீக்கங்கள் மட்டும் செய்து அவர்களைச் சமாதானப் படுத்தப் பார்க்கிறது உபி போலீஸ். இப்படித்தான் சில வருஷங்களுக்கு முன்னர் இதே போல ஒரு காரியத்தை டெல்லி போலீஸும் செய்தது. அவர்களுக்குக் கிடைத்த தவறான தகவலின் பேரில் ஒரு பிரபலமான கிரிமினலின் முகச் சாயல் கொண்ட வியாபாரி ஒருவரை கர்ம சிரத்தையாகத் தொடர்ந்து வந்து மக்கள் அமோகமாகக் கூடியிருக்கும் கன்னாட் பிளேஸில் வைத்துச் சுட்டு வீழ்த்தினார்கள்! காவலர்களுக்கு, ஆயுதம் வழங்கும் அரசாங்கம் மெனக்கெட்டு கடவுளிடம் வரம் வாங்கி அவர்களுக்குக் கொஞ்சம் மூளையையும் கொடுக்கச் செய்யலாம்.



• காஞ்சி சங்கராச்சாரியார் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் நிம்மதியாக டெல்லி வந்து போய்க்கொண்டிருந்தார். தலைநகரிலுள்ளவர்களும் அவரை ஒரு பிரச்னையும் இல்லாது சந்தித்து ஆசி பெற்றுச் சென்றனர். இப்போது அதற்கும் வந்தது வம்பு. லஷ்கர்-இ-தொய்பா, ஜெய்ஷ்-இ-முகமது மற்றும் ஹிஸ்புல் முஜாஹிதீன் போன்ற பயங்கரவாத அமைப்புகள் ஜெயேந்திரரையும் விச்வ ஹிந்து பரிஷத்தின் ஆச்சார்ய கிரிராஜ் கிஷோரையும் அசோக் சிங்காலையும் கொல்லத் திட்டமிட்டிருப்பதாக டெல்லி போலீஸுக்குத் தகவல் கிடைத்துள்ளதாம்! இம் மூவரும் மற்ற மதத் தலைவர்களுடன் சமாதான பேச்சுவார்த்தைகள் மேற்கொள்ளவிருக்கும் கூட்டங்களின்போது தாக்குதல் நடத்த திட்டமிட்டிருப்பதாகவும் கிடைத்த தகவல், பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. இதைத் தொடர்ந்து இம் மூவருக்கும் பாதுகாப்பு ஏற்பாடுகள் மிகவும் தீவிரப்படுத்த திட்டமிடப்பட்டுள்ளது.

• நடப்பது பதின்மூன்றாவது மக்களவை. ராசியில்லாத இந்தப் பதின்மூன்று, பலவகையிலும் தங்களைப் பாடாய்ப் படுத்துவதாக பாராளுமன்ற உறுப்பினர்கள் நம்புகிறார்கள். பாலயோகி, கிருஷ்ண காந்த் மற்றும் பதினான்கு உறுப்பினர்களின் மரணத்துக்கும் இந்த எண்ணுக்கும் ஏதோ துஷ்ட சம்பந்தமிருப்பதாக வெளிப்படையாகவே பேசிக் கொள்கிறார்கள்.

· ராகவன் தம்பி

படம்: சௌரா

ॐ

# ஸ்ரீ ஸத்குரு ஸபா (Regd) வேத பாடசாலை

நெ. 31, சுப்ரமணியம் தெரு, மேற்கு மாம்பலம்,சென்னை - 600 033.

வேதோகிலோ தர்ம மூலம்!! வேதோ ரக்ஷதி ரக்ஷித!!

நம் ஆன்மீக அன்பர்களுக்கு ஸ்ரீ ஸத்குரு சபாவின் அன்பான வேண்டுகோள்!

இப்புவியும் நமது பாரத பூமிக்கே மிக பெருமை வேதம் என்ற பொக்கிஷம் அழியாமல் இருப்பதால்தான் இஃது பாவம் அறிந்ததே!

அப்படிப்பட்ட வேதத்தை நாம் அனைவரும் பயின்று அறிந்து இகபர நலன்களை அடைய வேண்டியது நம் அனைவரின் கடமை. காலப்போக்கில் அனுஷ்டிக்க முடியாத காரணத்தால் நாம் அனைவரும் தற்காலத்தில் அனுஷ்டிக்கும் வித்யார்த்திகளுக்கு சகல சௌகர்யங்களையும் செய்து கொடுத்து வேத மாதாவின் அருள் பெறலாமே! ஸ்ரீ காஞ்சி மகாசுவாமிகளின் உத்தரவுபடி ஆரம்பிக்கப்பட்டு இப் பாடசாலை 12 வருடங்களாக நடந்து வருகிறது.

அதற்கான உண்டானதுதான் ஸ்ரீ ஸத்குரு ஸபா வித்யா சாலையில் முறையாக உபநயன கர்மா செய்துகொண்டு குருகுல வாசமாக சுமார் 25 வித்யார்த்திகள் வேதம் ஸமஸ்கிருதம் ஸ்கூல் பாடம் பள்ளிக்கூட பாடங்கள் பயின்று வருகின்றார்கள்.

அவர்களுக்கு நாம் அனைவரும் உடுக்க உடை, அன்ன வசதி, தங்கும் வசதி, இதர வசதிகள் செய்து கொடுத்து வேதமாதாவின் அருளுக்கு பாத்திரம் ஆக வேண்டுமே.

வாருங்கள் நம் ஸத்குரு ஸபா வேத பாடசாலைக்கு நம் நடமாடும் தெய்வம் ஸ்ரீ காஞ்சி ஆச்சார்யாளின் நினைவாக பிடி அரிசி திட்டத்தை நம் கிரஹத்தில் ஏற்படுத்தி மாதம் இருமுறை வேத பாடசாலையில் அக்ஷதை, காணிக்கையை நேரில் கொடுத்த மங்கள ஆசீர்வாதத்தைப் பெறுங்கள்.

நம் திருமண தினம், பிறந்த தினம், பித்ருக்கள் தினம், இதர ஏனைய தினங்களில் ஒருநாள் சமாராதனையை (அன்னதானத்தை) ஏற்று க்ஷேமத்தை அடையுங்கள். ஒருநாள் சமாராதனை செலவாக ரூ. 1000/- என தீர்மானம் செய்து இருக்கின்றது.

வேதம் பயிலும் வித்யார்த்திகளுக்கு அன்னம் அளிப்பது பிக்ஷை என்று பொருள். ஸ்ரீ ஆதிசங்கரர் ஏழை பெண்மணியின் வீட்டு வாசலில் நின்று பவதி பிக்ஷாம் தேஹி என்று கேட்டு அப் பெண்மணி நெல்லிக்கனியை அளித்து ஸ்ரீ ஆதிசங்கரர் உடனே கனகதாரா ஸ்தோத்திரம் கூறி அனைத்து சௌக்கியத்தையும் அளித்தது நம் அனைவரும் அறிந்ததே.

வைப்பு நிதியாக தலா ரூ. 10000/- செலுத்தி தாங்கள் கூறும் தினத்தன்று வட்டியைக் கொண்டு சமாராதனை நடத்த ஒத்துழைப்பு தாருங்கள்.

தாங்கள் மற்ற விவரங்களுக்கு அணுக வேண்டிய முகவரி:

தலைமை ஆசிரியர், ஸ்ரீ ஸத்குரு ஸபா, வேத பாஷ்ய வித்வான்

**T.S. பாலசுப்ரமணிய கனபாடிகள்**

31, சுப்ரமணியம் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 600033. தொலைபேசி எண். 3710602.

தாங்கள் அளிக்கும் நன்கொடைக்கு வருமான வரி 80G விலக்கு உண்டு.

தங்கள் நல்வரவை நாடும்; ஸ்ரீ ஸத்குரு ஸபா வேத பாடசாலை நிர்வாகிகள்

# விற்பனையாகிறது!

# ஆன்மீகமலர்

**பெண்களுக்கு ஆன்மீக விழிப்புணர்வை உண்டாக்கும் தெய்வீக மாத இதழ்!**

ஆடி 2002

- ★ சில்பி வரைந்த திருக்கடையூர் அபிராமி வண்ண முகப்பு அட்டை!
- ★ பிள்ளை வரம் தரும் கலவை அங்காளபரமேஸ்வரி!
- ★ ஆடி ஆராதனைக்கு ஸ்ரீ வரலட்சுமி நோன்பு!
- ★ சனிப்பெயர்ச்சியன்று சனி பகவானுக்கு பரிகாரங்கள்!

தமிழில் முதன்முறையாக ஆன்மீகம் வழங்கும்
முழுக்க முழுக்க பெண்களுக்காக வெளிவரும்
ஒரே தெய்வீக மாத இதழ்!

ரூ.10

**ஒவ்வொரு தமிழ் மாதம் முதல் தேதியில் விற்பனைக்கு வருகிறது!**

# துணையா? தொல்லையா?

"எனக்கு துணைப் பிரதமர் என்ற பொறுப்பு கொடுக்கப்படவில்லையே தவிர, அந்தப் பதவிக்குரிய பணிகளை நான் ஏற்கெனவே நிறைவேற்றி வந்திருக்கிறேன். இப்போது முறையாக அந்தப் பொறுப்பு எனக்குக் கொடுக்கப்பட்டு, அரசு ரீதியாக ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறது"– துணைப் பிரதமராக நியமிக்கப்பட்டவுடன் அத்வானி பத்திரிகையாளர்களிடம் பேசும் போது சொன்னதுதான் இது! அத்வானியின் நியமனம் நிர்வாக அவசரத்தை முன்னிட்டு நடந்தது என்று சொல்ல முடியாது; அவசர அரசியல் தேவையை மனத்தில் வைத்துக் கொண்டு போடப்பட்ட உத்தரவு இது என்ற கருத்தும் உண்டு. அப்படியென்ன அரசியல் அவசரம்?

சமீபத்தில் நடந்த சட்டசபைத் தேர்தல்களில் உத்தரபிரதேசம், பஞ்சாப் ஆகிய முக்கிய மாநிலங்களில் பா.ஜ.க. பலத்த அடி வாங்கியது. வருகிற 2003 மார்ச் மாதம் ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் உட்பட பத்து மாநிலங்களில் சட்டமன்றத் தேர்தல் வருகிறது. அதைவிட முன்னதாக குஜராத்தில் தேர்தல் நடத்திட பா.ஜ.க. முனைந்து வருகிறது. அந்த மாநிலத் தேர்தல்களில் கணிசமான வெற்றியைக் கைப்பற்றவில்லையென்றால், மத்தியில் உள்ள தே.ஜ.மு. ஆட்சியே ஆட்டம் கண்டு விடும். ஆனால் தீவிர ஹிந்துத்வா கொள்கையை நீர்த்துப் போகச் செய்துவிட்டு,



படம்: சௌரா



தேர்தலைச் சந்திப்பது என்பது தற்கொலைக்குச் சமம் என்பது சங்கக் குடும்பத்தின் கணக்கு. எனவே, அந்த ஹிந்துத்வா கொள்கையைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கும் ஒருவர் முன்னணியில் இருக்கும்படி செய்தாக வேண்டும். அப்போதுதான் சட்டமன்றத் தேர்தலில் வெற்றி அமையும் என்ற இந்த நோக்கத்தில்தான் அத்வானிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு முன்னணியில் நிறுத்தப்பட்டிருக்கிறார் என்கிறார்கள். வாஜ்பாயின் மிதவாத "முகம்" பா.ஜ.கவுக்கு, தே.ஜ.முன்னணி ஆட்சி நீடிக்க வகை செய்து கொடுத்திருக்கிறதே தவிர வோட்டு வங்கியில், குறிப்பாக சிறுபான்மையோர் மத்தியில் எந்தவித செல்வாக்கையும் தேடித் தரவில்லை என்று திட்டவட்ட முடிவுக்கு வந்து விட்டது பா.ஜ.க. இது தவிர, இந்த மிதவாத தலைமையினால், இருக்கிற ஹிந்து வோட்டு வங்கியையும் இழந்து விடும் ஆபத்து இருப்பதாக ஆர்.எஸ்.எஸ். அபாய மணி அடித்து விடவேதான், இந்த அவசர அவசியத் தேவையாக, 'ரதயாத்திரை வெற்றி வீரர்' அத்வானி, துணைப் பிரதமராக நியமிக்கப்பட்டு சகல அதிகாரங்களையும் கோலோச்ச அனுமதிக்கப்பட்டிருக்கிறார் என்ற விமர்சனமும் எழுந்திருக்கிறது. சரி; அப்படியென்றால் வாஜ்பாய் என்ன ஆர்.எஸ்.எஸ். இயக்கத்துக்குத் தொடர்பில்லாதவரா, ஆர்.எஸ்.எஸ். கட்டளையை அவர் நிறைவேற்றமாட்டாரா?

அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது, அங்கு "நான் எப்போதும் ஒரு ஸ்வயம் சேவக்காகவே இருப்பேன்" என்று சொன்னவர் தான் வாஜ்பாய். ஆனால் அவரது மிதவாத முகம் (வாஜ்பாய் பற்றி முன்னாள் பா.ஜ.க. பொதுச் செயலாளர் கோவிந்தாசார்யாவின் அபிப்ராயம்தான் இது). 'ஹிந்துத்வா' முகமாக மாறினால் தே.ஜ.மு. ஆட்சி கவிழ்ந்து விடும் ஆபத்து இருக்கிறது. இது தவிர, அப்படிப்பட்ட தீவிர நிலை எடுப்பதென்பது, இதுவரை கடைப்பிடித்து வந்த நிலையிலிருந்து மாறுபட்டு இருக்குமாதலால், ஹிந்துத்வா வோட்டு வங்கியின் நம்பிக்கையை முழுவதுமாகப் பெறவும் முடியாது. மேலும் மூப்பு, மற்றும் உடல்நிலை காரணமாக வாஜ்பாய் செயல்படும் ஆற்றல் குறைந்து கொண்டே வருகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. அவர் நினைத்ததைச் செய்யக் கூட முடியாத நிலையில் இருக்கிறார் என்பதே யதார்த்தம். அதற்குச் சரியான உதாரணம் குஜராத்.

நரேந்திர மோடி 'ராஜினாமா' செய்ய வேண்டுமென்று அறிவுரை மட்டும் சொல்ல முடிந்ததே தவிர அவரை நீக்க முடியவில்லை. இதற்குக் காரணம் ஆர்.எஸ்.எஸ். மற்றும் வி.ஹெச்.பியின் ரகசிய வேலைத் திட்டத்தைக் கச்சிதமாக அவர் குஜராத்தில் நடத்தி முடித்ததுதான். அந்த நரேந்திர மோடிக்குப் பின்பலமாக இருப்பவர் அத்வானி. எனவேதான் அத்வானிக்குப் பொறுப்பைக் கொடுத்து, உடனடியாகக் களத்தில் இறக்கி விடுவதன் மூலம், தேர்தல் நடைபெறவிருக்கும் மாநிலங்களில், ஹிந்துத்வா வோட்டு வங்கியை அவர் ஒருமுகப் படுத்துவார் என்று கருதுகிறது ஆர்.எஸ்.எஸ். பல நடுநிலைப் பத்திரிகைகளும் தலையங்

கங்களில் இது போன்ற கருத்தைத் தெரிவித்திருக்கின்றன.

அத்வானி "இந்தியாவின் இரண்டாவது இரும்பு மனிதர்'' என்று பெருமையுடன் சொல்கிறது ஹிந்துத்வா வட்டாரம். அவர்கள் பார்வையில் முதல் இரும்பு மனிதராக விளங்கிய வல்லபபாய் படேலும் நேரு அமைச்சரவையில் துணைப் பிரதமராக இருந்தவர்தான். காந்திக்கு இரு கண்களாக இருந்தவர்கள் நேருவும், படேலும். சுதந்திரம் வந்து பிறகு நடந்த இடைக்கால அரசியல் துணைப் பிரதமராக இருந்தார் படேல். நேரு இருக்கும்போது, படேலைப் பிரதமராக போட முடியாது; எனவே அவரது முக்கியத்துவத்தையும், அரசியல் உயர்வையும் கருத்தில் கொண்டு படேலுக்கு து.பி. பொறுப்பு கொடுக்கப்பட்டது. நேருவுக்கு உலகப் பார்வை. சர்வதேச அரங்கில் சிறந்த பெயர் வாங்க வேண்டுமென்பதற்காக 'சாந்தி, சமாதானம்' என முழங்கி வந்தவர். ஆனால் படேல் வலதுசாரி கொள்கை உடையவர் என்ற விமர்சனம் குத்தப்பட்டவர். நேருவுக்கும் அவருக்கும் கடுமையான கருத்து மோதல்கள். காந்திக்குப் பெரிய தலைவலி. ஐந்நூறுக்கும் மேற்பட்ட சமஸ்தானங்களை இணைத்துச் சாதனை படைத்தவர் படேல். அப்போது அவருக்கு உதவியாக இருந்தவர் மேனன் என்ற அதிகாரி. காஷ்மீர் விவகாரத்தில் நேரு – படேல் கருத்து மோதல் வெளிப்படையாகவே வெடித்தது. படேல் இறந்த போது நேரு மரியாதை செலுத்தக் கூட போகவில்லை. துணைப் பிரதமர் பொறுப்பு என்பது பிரதமருக்கு உதவி புரிவதைவிட தொல்லையாக இருக்கும் என்று நேரு கருதியிருப்பார் போலும்... அப்புறம் அவர் இறக்கும் வரை, து.பி. என்ற பொறுப்பில் யாரையும் போடவில்லை.

லால்பகதூர் இறந்த பிறகு, பல ஸீனியர் தலைவர்கள் இருந்தும், காமராஜ் யுத்தியின் படி இந்திராகாந்தி பிரதமராக்கப்பட்டார். தனக்கு அடங்கி இருப்பார் என்று காமராஜ் போட்ட கணக்கு பின்னர் பொய்த்துப் போனது. அவருக்குப் போட்டியாக நின்ற மொரார்ஜிக்கு து.பி. பொறுப்பு கொடுக்கப்பட்டது. கடுமையான அபிப்ராயங்களைத் தயங்காமல் சொல்பவர் மொரார்ஜி. பல விஷயங்களில் கருத்து மோதல்கள். இறுதியில் ஜனாதிபதி தேர்தலுக்கு வேட்பாளர் தேர்வு செய்வதில்

''அந்த டாக்டர் ஆடிட்டரா இருந்து பல் டாக்டரா ஆனார்னு எதை வைச்சு சொல்ற?''

''அவர் தன்னோட பேஷண்டுக்கிட்டயெல்லாம் 'உனக்கு அசையும் சொத்தை எத்தனை, அசையா சொத்தை எத்தனை?'னு தான் கேட்கிறாராம்!''

– வே. ஈஸ்வரன்

கருத்து மோதல் ஏற்பட்டு, மொரார்ஜியைப் பதவியிலிருந்து நீக்கினார் இந்திரா. காங்கிரஸ் பிளவு பட்டது. அதன் பின் 1977ல் ஜனதா ஆட்சியின்போது மொரார்ஜி பிரதமர். இருபெரும் தலைகளாக சமமாக நின்ற ஜெகஜீவன் ராமுக்கும், சரண்சிங்குக்கும் து.பி. பொறுப்புகள் கொடுக்கப்பட்டன. ''பிரதமராக ஆக முடியாதவர்களின் 'அரிப்பை' தீர்க்கத்தான் இந்த துணைப் பிரதமர் பொறுப்பு என்று வெளிப்படையாகவே பேசப்பட்டது. 1989ல் தேசிய முன்னணி ஆட்சியின்போது தேவிலால் து.பி. ஆக்கப்பட்டார். சம அந்தஸ்து உள்ள ஓர் அரசியல் தலைவரைச் சமாதானம் செய்து கொண்டு சங்கடங்களைத் தீர்த்துக் கொள்ள பிரதமர் பொறுப்பில் இருப்பவருக்கு மிகச் சுலபமான வழி, துணைப் பிரதமர் பதவியை தத்தம் செய்வது தான் என்று சொல்லப்பட்டது.

கிட்டத்தட்ட பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது மீண்டும் துணைப் பிரதமர் பொறுப்பு அரங்கேறியிருக்கிறது. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் து.பி. என்ற பதவிக்கு இடம் கிடையாது. 1979ல் ஜனதா ஆட்சியில் அரசாங்க ஆணையின் மூலம், து.பி. பொறுப்பு 'ப்ரோடோகால்' வரிசையில் 5A என்று நிர்ணயிக்கப்பட்டது.

"ஒரு அரசியல் குழப்பம், ஸ்திரமற்ற தன்மை ஆகியவற்றைச் சரி செய்ய ஒரே கட்சியில் உள்ள இருபெரும் தலைவர்களிடையே பகிர்ந்து கொள்ளப்படுபவைதான் பிரதமர் மற்றும் துணைப் பிரதமர் பதவிகள். தே.ஜ.மு. ஆட்சியில் அது போன்ற நிலை தற்சமயம் இல்லை. மேலும் "வாஜ்பாய்தான் என் தலைவர்'' என்று அத்வானியே சொல்கிறார். அப்படியிருக்க அத்வானியை முன்னிறுத்த வேண்டிய அவசியம் என்ன?

'அயோத்தி' மக்கள் நம்பிக்கையைப் பற்றிய விஷயம்'' என்று இப்போது



வி.ஹெச்.பி. சொல்வதை முன்பே சொன்னவர்தான் அத்வானி. எனவே அவரை முன்னிறுத்தி தேர்தலைச் சந்திக்க முடிவு செய்து விட்டார்கள்'' என்று சொல்கிறார் த.மா.கா. ஸீனியர் பிரமுகர் பீட்டர் அல்போன்ஸ்.

"சென்ற தேர்தலில் பாபர் மசூதி இருந்த இடத்தில் ராமர் கோயில், பொது சிவில் சட்டம், அரசியல் சட்டம் 370ஐ (காஷ்மீர் சம்பந்தப்பட்டது) நீக்குவோம் போன்ற வாக்குறுதிகளை வைத்துத் தேர்தலில் போட்டியிட்டது பா.ஜ.க. முழு வெற்றி கிடைக்கவில்லை. எனவே இந்த, தனது அஜண்டாவைத் தற்காலிகமாக ஒத்தி வைத்துவிட்டு மதச்சார்பற்ற சக்திகளுடன் கைகோத்து ஆட்சி அமைத்தது. இப்போது அவர்களைக் கலந்து ஆலோசிக்காமலேயே, மீண்டும் ஹிந்துத்வா வேலைத் திட்டத்தை நிறைவேற்ற பா.ஜ.க. முடிவு செய்து விட்டது. அதன் காரணமாகவே அத்வானி துணைப் பிரதமர் ஆக்கப்பட்டுள்ளார். இவர் வாஜ்பாய்க்குத் தொல்லையாக இருப்பாரா என்று ஆராய்வதைவிட, மதச்சார்பற்ற நம்முடைய இந்திய பாரம்பரியத்துக்குத்தான் இவர் தொல்லையாக இருப்பார் என்றுதான் நினைக்கிறேன்'' என்கிறார் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கியப் பிரமுகரான சி.மகேந்திரன்.

இதையெல்லாம் முற்றிலுமாக மறுக்கிறார் பா.ஜ.க. தலைவரான வெங்கையா நாயுடு. "காஷ்மீர் மற்றும் பல்வேறு பிரச்னை காரணமாக சர்வதேச அரங்கில் இந்தியாவின் ஈடுபாடு அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இது தவிர கட்சியின் உட் பிரச்னைகள், எதிர்வரும் தேர்தல், ஆகியவற்றைச் சந்திக்க, சமாளிக்க அத்வானியின் சாணக்கியம் கட்சிக்கு அவசியத் தேவை. இதை மனத்தில் வைத்தே அத்வானிக்குப் பொறுப்பு கொடுத்திருக்கிறார் வாஜ்பாய். சாதனைகளின் அடிப்படையில்தான் தேர்தலைச் சந்திப்போம். 2004 தேர்தலிலும் வாஜ்பாயை பிரதமராக முன்னிறுத்திதான் தேர்தலைச் சந்திப்போம் என்கிறார் நாயுடு.

இதற்கிடையில், தமக்குக் கொடுக்கப்பட்ட வாய்ப்பை முழுவதுமாக பயன்படுத்த கோதாவில் குதித்துவிட்டார் அத்வானி. அதிகார மையமும், கட்சியும் இப்போது அவரது முழுக் கட்டுப்பாட்டில். தேர்தல் சீர்திருத்தம் பற்றிய அனைத்துக் கட்சிக் கூட்டத்திற்கு அத்வானிதான் தலைமை வகித்தார். கடும் வறட்சியைச் சமாளிக்க அமைக்கப்பட்டுள்ள நடவடிக்கை குழுவின் தலைவராகவும் அத்வானி போடப்பட்டிருக்கிறார். பிரதமர் அலுவலகம் தனது கட்டுப்பாடுகளை மெதுவாக இழந்து கொண்டிருக்கிறது. இத் தருணத்தில் 'வாஜ்பாய் மகனால் சிறை வைக்கப்பட்ட முகலாய அரசர் ஷாஜகான்' நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டார் என்ற மம்தாவின் சொல்லம்பையும் கவனத்தில் கொள்ள வேண்டும் (அவரது மற்ற கருத்துக்களை ஒதுக்குவோம்)

இப்படி அதிரடியாக தனது ஹிந்துத்வா முகத்தைக் காட்ட பா.ஜ.க. துணிந்து விட்டது குறித்து மதச்சார்பற்ற தே.ஜ.கூட்டணிக் கட்சிகளுக்கிடையே எந்தவித முணுமுணுப்பும் இல்லை. 'இருக்கும் இடமே சுகம்' என்று இருக்கின்றன. பல தே.ஜ.மு. கட்சிகளிடையே உள்ள உட்கட்சிப் பிரச்னைகள் மற்றும் பிளவுகளால் அவர்களது குரல் பா.ஜ.கவிடம் எடுபடவில்லை. அரசாங்க மட்டத்தில் பார்த்தால் 77 அமைச்சர்களில் 55 பேர் பா.ஜ.க. இது தவிர நாடு முழுவதும் சங்கப் பிரமுகர்கள் கவர்னர்களாக நியமிக்கப்பட்டு வருகிறார்கள். "இந்த ஏற்பாட்டை இப்படியே சில காலம் நகர்த்திக் கொண்டு போவதுதான் புத்திசாலித்தனம். பத்து மாநில சட்டமன்றத் தேர்தல் முடிவுகளுக்குப் பின்னர்தான் தெளிவான அரசியல் நிலை உருவாகும்'' என்கிறார் ஸீனியர் தி.மு.க. பிரமுகர் ஒருவர் .

"தீவிர ஹிந்துத்வா முகத்தை அத்வானி மூலம் பயன்படுத்தி, சட்டமன்றத் தேர்தல்களில் வெற்றியைக் குவித்தால் பா.ஜ.க. கூட்டணிக் கட்சிகளைக் கூட உதறியெறிந்து விட்டு, ஹிந்துத்வா அமைப்புகளுடன் சேர்ந்து 2004 பாராளுமன்றத் தேர்தலைச் சந்திக்கும். அதற்கான, பா.ஜ.க. முயற்சிகளை விரைவில் பார்க்கலாம்" என்றும் சொல்கிறார் அவர்.

— ப்ரியன்



# சுபவசந்தம் A/c திருமண மண்டபம்



70, வேலாயுதம் காலனி, சாலிக்கிராமம், சென்னை-93 Ph : 3762687 Cell : 98411-09476

Website :

www.hellochennai.com/marriage/subavasantham

www.indiayellowpagesnet.com/subavasantham

உங்களின் இல்லங்களில் இன்பம் பொங்கும் திருமணம், பிறந்த நாள், மஞ்சள் நீராட்டு விழா, வளைகாப்பு விழா, உபநயனம், சீமந்தம், வெள்ளி விழா, பொன் விழா, மணி விழா, பவள விழா, வைர விழா, நூற்றாண்டு விழா, வரவேற்பு போன்ற இனிய வைபவங்களுக்கும், வர்த்தக நிறுவனங்களில் வருடாந்திர கூட்டங்கள், கருத்தரங்குகள், பயிற்சியரங்குகள், கண்காட்சிகள், விளம்பர முகாம்கள், விருந்துகள், கலை நிகழ்ச்சிகள் போன்ற தேவைகளுக்கு பயன்படுத்தக் குளிர்சாதன வசதிகளுடன் அமைக்கப் பெற்ற ஒரு சிறப்பான மண்டபம்.

## சுபவசந்தம்

- சுமார் 300 சொகுசு இருக்கைகளுடன் கூடிய குளிர்சாதன மண்டபம்
- விசாலமான அனைத்து வசதிகளும் கொண்ட குளிர்சாதன மேடை
- 110 பேர் அமர்ந்து உணவருந்தக்கூடிய தூய்மையான சாப்பாட்டு மண்டபம்
- நவீன வசதிகளுடன் கூடிய சமையலறை, பாத்திரங்களுடன்
- 6 பெரிய தங்கும் அறைகள், குளியல் வசதியுடன் அவற்றில் 4 ஏ.சி.யுடன்
- பொதுக் குளியல், கழிவறைகள், நிறைந்த நீர் வசதி, சுகாதாரத்துடன்

**உங்கள் தேவைக்கேற்ப அனைத்து வசதிகளுடன் கூடிய அழகிய மண்டபம் சுபவசந்தம் குறைந்த வாடகையில் உங்கள் தேவைக்கு உடனே அணுகுங்கள்**

தேவையே எங்கள் நோக்கம்! உங்கள் மகிழ்ச்சியே எங்கள் இலக்கு!! சுபவசந்தத்தில் துவங்கி உங்கள் வாழ்க்கையில் வசந்தம் வீசட்டும்!!!

## திபெத்திய, சீன நாட்டு தேவதை தாராவின் நோய் தீர்க்கும் தெய்வீகக் கலை (Axitonal Alignment)



நம் ஸ்தூல உடலை சுற்றி ஒளி வாய்ந்த ஒளிப்பாதைகள் பதினாறு உள்ளன. இந்த ஒளிப் பாதைகள் தூண்டப்படாமலும், உபயோகிக்கப்படாமலும் போவதால் நம்முடைய பஞ்ச கோசங்களான அன்ன, பிராண, மனோ, விஞ்ஞான, ஆனந்த மய கோசங்கள் செயல் இழக்க ஆரம்பிக்கிறது. இதனால் நமக்கு மூப்பு, பிணி, தரித்திரம், கர்மா போன்ற உபாதைகள் ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. மனித வாழ்வின் கடைசி கட்டமான கலியுகத்திலிருந்து பொற்காலத்திற்கு செல்லும்போது முப்பரிமாண எண்ணம், செயல்பாடு உடைய இப்போதைய உடலால் எவ்வித உபயோகமும் இல்லை.

ரகசியமானதும், பழமையானதும் திபெத்திய மடாலயங்களில் பாதுகாக்கப்பட்டதுமான இந்த அரிய கலையை கற்க வாருங்கள். வாழ்நாளை உற்சாகமான நாளாக மாற்றி கவலையற்று இருங்கள். இக்கலை மனித பரிணாம வளர்ச்சியின் காரணமாக இப்போது கிடைக்கப் பெறுகிறது. பொன்னான வாய்ப்பை பயன்படுத்த இன்றே வாருங்கள். ரேய்கி, மாக்னிபைட் ஹீலிங் போன்ற பயிற்சிகளிலிருந்து முற்றிலும் மாறுபட்ட பயிற்சி. வாழ்வில் ஒவ்வொருவரும் உயர வழி செய்யும் பயிற்சி. பிரபஞ்சத்தின் சக்தி வாய்ந்த பகுதியில் உங்களை இணைக்கும் பயிற்சி. ஆனால் ஆழ்மனச் சக்தி போன்ற Mind 'Techniques' க்கும் இதற்கும் எந்த வித சம்பந்தமும் கிடையாது. உடல், மனம், ஆன்மாவுக்குமான பூரண வழிமுறை ஆதலால் ஆன்மீக சக்திகளும், பெரியவர்களும் (Ascended Masters) உங்களுக்கு காட்சியும், அருளும் செய்ய வாய்ப்பு இப்பயிற்சியில் ஏற்படும்.

வளர்ந்த நாடுகளான அமெரிக்கா, ஐரோப்பா, கானடா போன்ற நாடுகளில் பரவிவரும் இந்த அற்புத கலையை உங்களுக்கு இந்தியாவில் பயிற்சியளிக்கும் முதல் பெண்மணி இவர் ஒருவரே. பழத்தின் ருசியை புசிப்பதால் மட்டுமே உணரலாம். வருக பயன் பெறுக.

பயிற்சியில் தாரா தேவி மந்திரம், தியானம், நோய் நமக்கும் பிறருக்கும் செய்விக்க முறையாக, செம்மையாக பயிற்சி அளிக்கப்படுகிறது.



**K. NAGALAKSHMY,**
Trainer / Facilitator
Sakara Therapist
Reiki / Seichem
Grand Master

கற்க, சிகிச்சை பெற தொடர்பு கொள்க :

No.5, First Floor, 'Srijees' No.177 (Old No.103)
Lloyds Road, Royapettah, Chennai - 14
Ph : 4717685, 82112726 Cell No.98410 31340
E-mail.nagalakshme@hotmail.com






# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## வறட்சி வரலாறை மாற்றுங்கள்!

'வறட்சியானாலும் சரி. பஞ்சமானாலும் சரி... தமிழ்நாட்டில் ஒரு குடிமகன்கூட உணவின்றி அவதிப்படக்கூடாது!' என்று தமிழக கலெக்டர்களுக்கு ஆணையிட்டுள்ளார் ஜெயலலிதா!

கேட்பதற்கு மிக நன்றாகவே இருக்கிறது. ஆனால் நிலைமை என்ன...?

ஒரு வேளை சோற்றுக்குக்கூட வழியில்லாமல் கஞ்சி தொட்டி நிறுவியிருக்கிறார்கள் ஸ்ரீவில்லிபுத்தூர் நெசவாளர்கள். வயது வித்தியாசமின்றி அந்த எளிய மக்கள் வரிசையில் நின்று கஞ்சி வாங்கிச் செல்வதைக் காண மிக அவலமாக இருக்கிறது.

இலவச வேட்டி சேலை வினியோகத்தை ரத்து செய்ததால், அத்தனை நெசவாளர்களும் வேலை இழந்துவிட்டனர். இப்படி நடக்கும் என்ற தொலைநோக்கு இருந்திருந்



2002 ஆகஸ்ட் 11
சித்ரபானு ஆடி 26
மலர் : 61
இதழ் : 2




தால் அந்த நெசவாளர்களுக்கு வேறுவிதமான வேலைவாய்ப்புகள் ஏற்படுத்தித் தந்திருக்கலாம். அல்லது, ஏற்றுமதி ஆர்டர்களைக் கணிசமாகப் பெற்று வேறு ரகத் துணிகளை நெய்யச் செய்திருக்கலாம்.

அந்தத் தொலைநோக்கு அரசுக்கு இல்லாதிருப்பது தமிழகத்தின் துரதிர்ஷ்டம். தி.மு.க. கஞ்சி தொட்டி வைத்தால் அ.தி.மு.க. முட்டை பிரியாணி விருந்து வைக்கும் என்ற ரீதியில் எதையும் கட்சி அரசியலாக்குகிறார்களேயன்றி பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு என்ன என்று சிந்திப்பதில்லை.

நெசவாளர் துயரைக் காட்டிலும் பெரிய அவலமாக, இவ்வாண்டு கடுமையான வறட்சி ஏற்பட்டு விவசாயப் பணிகளும் நின்று போயிருக்கின்றன. தென்மாவட்டங்களில் குடி தண்ணீருக்கே பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது.

உடனடி நடவடிக்கையாக தமிழக எம்.எல்.ஏக்களின் தொகுதி நிதியிலிருந்து தலா பதினைந்து லட்சம் ஒதுக்கும்படி உத்தரவிட்டுவிட்டார் ஜெயலலிதா. இதன் மூலம் கிடைக்கின்ற முப்பது கோடி ரூபாயுடன் இயற்கை விபத்துகள் நிவாரண நிதியிலிருந்து இருபது கோடி ரூபாய் ஒதுக்கீடாகிறது. அது போதாதென்று மத்திய அரசிடம் வறட்சி நிவாரணமாக மேலும் 123 கோடி கேட்டுள்ளது தமிழக அரசு.

வட மாநிலங்களில் தென்மேற்குப் பருவமழை பொய்த்ததால் ஏற்பட்டுள்ள வறட்சியை எப்படி சமாளிப்பது என்று டெல்லியில் கூட்டம் போட்டுச் சிண்டைப் பிய்த்துக் கொண்டிருப்பவர்கள் தமிழக அரசு கேட்பதை உடனே கொடுத்துவிடப் போவதில்லை.

மத்திய அரசு ஏற்கெனவே தர வேண்டிய முந்நூறு கோடி, தரிசு நில அபிவிருத்தித் திட்ட ஒதுக்கீடாக அது தர வேண்டிய நூறு கோடி என்று தமிழக அரசு, இல்லாத ரூபாயைக் கணக்கில் எடுத்துக் கொண்டு வறட்சி நிவாரண திட்டங்கள் தீட்டுகிறது!

இது ஒரு பக்கம் இருக்க, இத்தொகைகள் முழுதுமோ அல்லது பகுதியளவிலோ கைக்கு

வருமானால், அதோடு தமிழக அரசின் நிவாரண ஒதுக்கீடும் இணைய, மொத்த தொகையும் நிஜமாகவே வறட்சி நிவாரணப் பணிகளுக்கே பயனாகுமா?...

நமது அரசியல் கட்சிகளும் சரி, ஆட்சி நிர்வாக அமைப்பும் சரி, நிவாரணத் தொகைகளை நிர்தாட்சண்யமாகச் சுரண்டக் கூடியவை. சமூக நலத் திட்டம், நிவாரணப் பணி போன்றவற்றுக்கு ஒதுக்கப்படும் ஒவ்வொரு ரூபாயிலும் மூன்றில் ஒரு பங்குகூட இறுதிப் பயனுக்குப் போய்ச் சேருவதில்லை.

இந்த அவல வரலாறை மாற்றி எழுதும் பொறுப்பும் கட்டாயமும் முதல்வர் ஜெயலலிதாவுக்கு இன்று ஏற்பட்டிருக்கிறது.

நிவாரணத் தொகை நேர்மையாய்ச் செலவிடப்படவேண்டும் என்று உத்தரவிடுவதுடன் அதனை மேற்பார்வையிட அரசியல் சார்பற்ற ஒரு தனிக் குழுவை நியமிக்கலாம். நேர்மைக்குப் பெயர்போன முன்னாள் ஆட்சியாளர் ஒருவரை அதன் தலைவராக்கலாம்.

இந்த வறட்சியின் கொடுமையிலிருந்து மக்களைக் காக்காவிட்டால் ஜெயலலிதா அரசுக்கு ஆதரவு வெகுவாகக் குறைய வாய்ப்பிருக்கிறது.

ஆகவே, அரசியல் ரீதியாகவும் சரி, மனிதாபிமான அடிப்படையிலும் சரி, தார்மிக அடிப்படையிலும் சரி, இந்த வறட்சி பிரச்னையை வெற்றி கொள்வது மிக அவசியமாகிறது.

அங்கொன்றும் இங்கொன்றுமாக ஊழல் குற்றச்சாட்டுகள் தலை தூக்கும்போதே முதல்வர் கடுமையாய் நடவடிக்கை எடுப்பாரேயானால், சுரண்டலைக் கட்டுப்படுத்தி விடலாம்.

மாறாக, கட்சிக்காரர்கள் வழிகாட்ட, அரசு இயந்திரமும் நிர்வாகமும் நிவாரணத் தொகையில் கை வைக்க, அதை முதல்வர் கண்டும் காணாதிருக்க நேர்ந்தால் மக்கள் மனங்களும் வறண்டு போகும். ஆட்சிக்கு எதிரான வெறுப்பும் அம்மனங்களில் குடி கொள்ளும். ○

# புக் பேங்க்

## ஸ்ரீஸுப்ரமண்ய புஜங்க ஸ்தோத்திரம் - கிருபானந்த வாரியார்

சுப்ரமண்ய க்ஷேத்திரங்களில் முதன்மை பெற்றது திருச்செந்தூர். இங்கு ஆதிசங்கரர் அருளிச் செய்த பிரபந்தம் புஜங்க ஸ்தோத்திரம். இதன் பொருளை கிருபானந்த வாரியார் இதில் விளக்கிக் கூறியுள்ளார்.

குகஸ்ரீ வாரியார் பதிப்பகம், 107, சிங்கண்ண தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2. விலை ரூ.12

## ஓடும் நதியின் ஓசை (இரண்டாம் பாகம்) - இறையன்பு

திசை தெரியாமல் தவிக்கும் இளைஞர்களுக்காக, தன்னம்பிக்கையூட்டும் கட்டுரைகள் கொண்ட தொகுப்பு. ஆசிரியர் கூறும் எடுத்துக்காட்டுகளும் மேற்கோள்களும் சிறப்பாக இருக்கின்றன.

தாகம், ப்ளாட் எண் ஜி.3/8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார், சென்னை - 17. விலை ரூ.65.

## அரப்பாவில் தமிழர் நாகரிகம் - குருவிக்கரம்பை வேலு

தமிழர் நாகரிகம், வரலாறு போன்றவை பற்றி வரும் ஆய்வு நூல்கள் புதுப்புதுச் செய்திகளைச் சொல்கின்றன. அந்த வகையில் இந்த நூலும் பல புதிய தகவல்களைத் தரும் வரலாற்று ஆய்வு நூலாக வந்திருக்கிறது.

சிவசக்தி பதிப்பகம், 20/43 நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம். விலை ரூ.100.

## ஸ்ரீவியாசரின் ஸ்ரீ மஹாபாரத பர்வங்கள்

வேத வியாச மஹரிஷியினால் அருளிச் செய்யப்பட்ட மஹாபாரதம்தான் உலகிலுள்ள அநேக கதைகளுக்கு ஆதாரமானது. வடமொழியில் எழுதப் பெற்ற இதை, கும்பகோணம் காலேஜ் சமஸ்கிருத பண்டிதர் தி.ஈ. ஸ்ரீநிவாஸாசாரியார் தமிழில் பெயர்த்திருக்கிறார். அதன் மறுபதிப்பு இந்நூல்.

ஸ்ரீசக்ரா பப்ளிகேஷன்ஸ், ப்ளாட் எண் 78, செல்வராஜ் நகர் விரிவு 2, சர்வே எண் 46/1பி எண் 4, ஊரப்பாக்கம், செங்கல்பட்டு தாலுகா, பக்கம் 915. விலை ரூ.330.

## கைப்பற்றி என் கனவு கேள் - சுகிர்தராணி

கவிதைகள். இனிமையான தலைப்புடன் வந்துள்ள சுவாரஸ்யமான கவிதைகள். ஆசிரியரின் அனுபவங்கள் சில கவிதைகளின் வாயிலாக வெளிப்படும்போது பிரமிக்க வைக்கின்றன.

பூங்குயில் பதிப்பகம் 100, கோட்டைத் தெரு, வந்தவாசி - 604 408. விலை ரூ.30.

— அழகி



• சௌந்தர்யா

‘மாத்தாடு... மாத்தாடு... மல்லிகே’ சௌந்தர்யா தாங்க முடியாத குஷியில் இருக்கிறார்... பின்னே... அவர் தயாரித்த ‘த்வீபா’ கன்னட திரைப்படம் சிறந்த படமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டு, தங்கத் தாமரை விருது பெற்றுள்ளதே! முதல் படத்திலேயே ‘ஸ்வர்ண கமலம்’ என்பதால் சௌந்தர்யா சந்தோஷப் படுவதில் அர்த்தமுள்ளது. ஆனால் இயக்குநர் கிரீஷ் காஸரவள்ளிக்கு தேசிய விருது என்பது முக்குக் கடையில வெற்றிலை சீவல் வாங்குவது போல; நான்காவது முறையாகப் பெறுகிறார்!

‘தபரண கதே’, ‘கடஸ்ராத்தர்’ போன்ற கலை நுணுக்கப் படங்களை இயக்கி, பெரும்

# தாமரை வாங்கிய மல்லிகை

புகழ் பெற்ற காஸரவள்ளியின், சமீப கால படங்கள் அப்படியொன்றும் தாட்பூட் ஹிட்டு ஆகவில்லைதான். ‘தாயி சாஹேபா’ என்ற படம் இரண்டு வாரம் ஓடுவதற்குள் நுரை தள்ளிவிட்டது. வேறொரு படமான ‘க்ரௌர்யா’ இன்னும் ரிலீஸே ஆகவில்லை. ‘த்வீபா’ இன்னும் திரையிடப்படவில்லை. இருந்தாலும் ஆஸ்கார் வரைக்கும் போன ‘லகானை’ பின்னுக்குத் தள்ளிவிட்டு, தங்கக் கமலத்தைத் தட்டிச் சென்றுவிட்டது. அதற்காகவே த்வீபாவை ஒரு தபா பார்க்கலாம்!



• ப்ரீத்தி

கர்நாடக மாநில ஆளுநர் ரமாதேவி மூட்டை முடிச்செல்லாம் கட்டிக்கொண்டு தயாராக இருக்கிறார். பதவிக்காலம் முடிந்துவிட்டது. புது ஆளுநர் யார் என்பது பற்றிதான் ஏகப்பட்ட சஸ்பென்ஸ். 99ல் பதவியேற்ற ரமாதேவி, ஒன்றரை வருட காலம் ஹிமாசல பிரதேசத்தில் ஆளுநராகப் பணி புரிந்ததால், இங்கு கர்நாடகத்தில்

## அண்டை வீட்டு வம்பு!

மூன்றரை வருட பணியோடு ஓய்வு பெறுகிறார். பதவி நீடிப்பு அநேகமாக இருக்காது என்பதால், ரமாதேவி, சொந்த ஊரான ஹைதராபாத்தில் செட்டில் ஆகிவிடப் போகிறாராம்.

தேவகௌடாவையும், ராமகிருஷ்ண ஹெக்டேவையும் பார்த்தால், முகம்மது அலி - ஹோலிஃபீல்டு ஞாபகம்தான் வருகிறது. அப்படியொரு குஸ்தி! குலை நடுங்க வைக்கும் கோதா!

"முன்னாள் பிரதமராக இருந்த மனிதருக்கு நாகரிகமே தெரியவில்லையே. "ரத்த ஆறு ஓட வைப்பேன். வீதியில் குதித்து போராட்டம் நடத்துவேன்..." என்றெல்லாம் குதிப்பதோடு, தலையில் மண்ணெண்ணெய் டின் வேறு வைத்துக்கொண்டு போஸ் தருகிறாரே? பணத்தையும் மதுவையும் தாராளமாக ஓட விட்டு, கனக்புரா தொகுதியில் ஜெயித்துவிட்டார்" என்கிறார் ராமகிருஷ்ண ஹெக்டே. "ஹெக்டே ஒரு குழப்பவாதி. அவர் கை பட்டால் எதுவும் விளங்காது" என்கிறார் தேவகௌடா. தினமும் சண்டை போட்டு மண்டை உடைத்துக் கொள்வதே பெரிசுகளின் அரசியல் பண்பாடு ஆகிவிட்டது. உடைந்து போன ஜனதாதளம் பாண்டேஜ் கட்டோடு, விந்தி விந்தி நடந்து கொண்டிருக்கும்போது, இவர்களும் இப்படி அடிச்சுக்கிட்டா... கொடுமைடா சாமீ!

இன்றைய தேதியில் கஸ்தூரி கன்னட நாட்டின் சூப்பர் ஹீரோ யார் என்றால் லோக் ஆயுக்தா தலைவர், ஜஸ்டிஸ் வெங்கடாசலாதான். அதிரடி சோதனை நடத்தி, ஊழல்களைப் பகிரங்கப்படுத்தி, அமர்க்களம் செய்து கொண்டிருக்கிறார். 'சிக் லீவ்', 'வி.ஆர்.எஸ்' என ஆர்.டி.ஓ சிப்பந்திகள் அலுவலகம் வரவே நாள் நட்சத்திரம் பார்க்கிறார்களாம். பொதுமக்கள் புகார் கொடுத்தாலும், சம்பந்தப்பட்ட அலுவலர்களைச் செமத்தியாகக் கவனித்து விடுவார்களாம். அதையெல்லாம் கண்காணித்து கெடுபிடி செய்ததில், அரசு அலுவலர்கள் ஒழுங்காக வேலைக்கு வர ஆரம்பித்திருக்கிறார்கள்.

மும்பை, தாதாக்களின் சாம்ராஜ்யமாக மாறிவிட்டிருப்பதால், மும்பை நட்சத்திரங்கள் தெற்கு நோக்கி ஜாகையை மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அந்த லிஸ்டில் நடிகை ப்ரீத்தி ஜிந்தாவும் உண்டு. பெங்களூருக்கு ஜாகை மாறியிருக்கிறார். பெங்களூர் மேலும் சுந்தரமாகிவிட்டது.

'சிம்ம ஹெஜ்ஜே' என்றொரு புது டீவி தொடர், சிங்க நடை போட்டு சிகரத்தில் ஏறப் போகிறது. நடிகர் விஷ்ணுவர்தனின் வாழ்க்கை வரலாறு மற்றும் சாதனைகளை அப்படியே கதையாக்கியிருக்கிறார்களாம். பனசங்கரியிலிருக்கும் மஞ்சுநாதர் கோயிலில் நடந்த பூஜையில், கிளாப் கட்டை அடித்து ஆரம்பித்து வைத்தவர் விஷ்ணுவின் இனிய நண்பர் அம்பரீஷ் (எம்.பி)...

— லதா சேகர்

**"என்ன ஸ்வாமி, தினசரி புலித்தோலில் அமர்ந்து ஆசி வழங்கும் தாங்கள் இன்று வெறுந் தரையில் உட்கார்ந்திருக்கிறீர்கள்?"**

**"ஹி... ஹி... எல்லாம் ஒரு பாதுகாப்புக்குத்தான்!"**

**- புளியரை கணேசன்**





**"படத்துலே கடைசி சீன்லே சுப்ர பாத பாடலைச் சேர்த்துருக்கீங்களே... ஏன்?"**

**"தியேட்டர்லே தூங்குறவங்களை எழுப்பியாகணுமே!"**

**- தஞ்சை தாமு**

# மூவர்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ.7,500/- இரண்டாம் பரிசு பெறும் வைரவிழா வைட்டமின் சிறுகதை**

**கா**வேரி சின்ன ஸ்டூலின் மேல் ஏறி பரணிலிருந்து சாமான்களை இறக்கிக் கொண்டிருந்தாள். அவள் கிளம்புவதற்கான ஆயத்தம் எல்லா செயல்களிலும் தெரியத் தொடங்கி விட்டது. ராமமூர்த்தி வாய் மூடிக் கிடந்தார். பேச்சு வெறும் தலையாட்டலும், ஒற்றைச் சொல்லாகவுமே சுருங்கிவிட்டது. தைரியம் இல்லை. நெஞ்சு வெடித்து விடுமோ என்ற பயம்.

மிகச் சிறிய வீடுதான். ஒழிப்பதென்று கிளம்பும் பொழுதுதான் எப்படி விஸ்வரூபம் எடுத்து விடுகின்றது. புத்தகங்களை எல்லாம் ஒரு நாள் ஒழிக்கத் தொடங்கினாள். டெலிவிஷன் இல்லை என்பதால் பொழுது போவது புத்தகமாகவும், பேப்பராகவும் சேர்ந்து விடுகிறது. அவருக்கு ஹிண்டு பேப்பர் மட்டும் போதும். குமாரசாமிபட்டி கழிந்து செர்ரி ரோடில் உள்ள கம்ப்யூட்டர் ஸெண்டருக்கு காவேரி கிளம்பிச் செல்லும் ஒன்பது மணிக்குப் பிறகு ஹிண்டு பேப்பரை முதல் பக்கத்தில் ஆரம்பித்தால் பகல் இரண்டு மணி வரை விடாமல் படிப்பார். பால் வாங்கி வருவார். தெரு முனை வரைப் போய் காய் வாங்கி வருவார். சப்போட்டா செட்டியார் வீட்டில் பவளமல்லியோ, நந்தியாவட்டை மலரோ பறித்துக் கொண்டு வருவார். பனி, வெயில் எதற்கும் கட்டுப்படாமல் ஓடிக் கொண்டிருக்கும் தினப்படி. இதோ இன்னும் இரண்டு நாளில் மாறப் போகிறது. காவேரியின் கணவன் வனமாலி, ட்யூட்டியில்





ஜாயின் பண்ணிவிட்டு, ஜாயினிங் டைம் விடுப்புடன் இரண்டு நாட்களில் அவளை அழைத்துக் கொண்டு போனபிறகு எல்லாமே மாறிவிடப் போகிறது.

அட்டைப் பெட்டிகள், ப்ளாஸ்டிக் கூடைகள், இரண்டு லெதர் சூட்கேஸ், ஒரு கொலுப்பெட்டி, எல்லாவற்றையும் இறக்கிவிட்டான். சுறுசுறுப்பும் முழுமையுமான வேலை. காவேரியின்

முத்திரை. அவள் பேசவில்லை என்றால் என்ன? இறக்கி வைத்த பொருட்களே ஆயிரம் கதை பேசும்.

"மிக்ஸியோட அட்டைப் பெட்டிதானே இது? இந்த மிக்ஸி வாங்கி பத்து வருஷம் இருக்குமா?" என்றார் அவளைப் பார்த்து. அவள் முகத்தில் விழுந்த ஒட்டடைத் தூசை கைகளால் தட்டி விட்டாள். முகத்தில் பாவம் எதுவுமில்லை. ஆழம் பார்க்கும் கிழவனை ஒரே ஒரு பார்வை பார்த்து விட்டு ஆணியில் தொங்கிக் கொண்டிருந்த கண்ணாடியில் அசங்கிப் போன குங்கு மத்தை சரி செய்து கொண்டாள். புதுத் தாலியின் மஞ்சள் கருக்கு மின்னியது.

அவர் சொன்னது மாதிரி அது பத்து வருடம் முன்பு வாங்கிய மிக்ஸிதான். நூற்பாலையில் வேலை செய்து கொண் டிருந்தான் சாரங்கன். முதல் வருட போனஸோ என்னவோ. மொத்தமாக ஆயிரத்து ஐந்நூறு ரூபாய். அப்பொழுது சாரங்கனின் அம்மாவும் உயிருடன் இருந் தாள். பட்டுப்புடைவை வாங்கிக் கொள்ளச் சொன்னார் அம்மா. மோனோ ரெக்கார்ட் ப்ளேயர் வாங்கலாம் என்றான் சாரங்கன். மிக்ஸி வாங்கலாம் என்றாள் காவேரி. அவன் பின்னால் அமர்ந்து முள்வாடி க்ராஸிங் தாண்டி முதல் அக்ரஹாரம் போய் வாங்கின மிக்ஸி. குப்பையாய்க் கிடப்பது போல தோன்றினாலும் மனசில் தோண்டத் தோண்ட ஏதாவது கிடைத்துக் கொண்டே தான் இருக்கிறது. வீட்டை ஒழிப்பதுபோல மனசை இலேசில் ஒழித்துவிட முடிவ தில்லை. மிக்ஸி வாங்கப் போனபொழுது குடித்த மசாலா சோடாவின் ருசி திடீ ரென்று அடி நாக்கில் ஈஷிக் கொள்கிறது - பத்து வருஷம் கழித்து!

ராமமூர்த்தி தன்னால் இயன்ற வரையில் கீழே இறக்கி வைத்த பொருட்களுக்குத் தூசி தட்டுவதும், தரம் பிரிப்பதுமாய் இருந்தார். அவருடைய பொருள்களை ஒரு பெரிய சூட்கேஸில் அடக்கி விடலாம். நான்கைந்து வேஷ்டிகள், இரண்டு போர்வைகள்; ஒன்றிரண்டு உள்ளாடை; மாதம் ஒரு முறை ஸ்டேட் பாங்கில் பென்ஷன் வரவு வைத்துக் கொள்ளும் பாஸ் புத்தகம்; கண்ணாடிக் கூடு; உபநிஷத் புஸ்தகம் நான்கைந்து; டவல் இரண்டு; ஒரு தட்டு; இரண்டு டம்ளர். அப்பா டம்ளர். டம்ளர் தட்டுக்கெல்லாம் கூட அவர்கள் வீட்டில் பெயர் உண்டு. கால் லிட்டர் பிடிக்கும் பெரிய டம்ளர் அப்பா டம்ளர். அந்த டம்ளர் முழுக்க காப்பியும், பாலும் குடிக்கும் அளவிற்கு ராமமூர்த்திக்கு திடகாத்திரமான தேகமில்லை. ஆனாலும் அந்த டம்ளர் அப்பா டம்ளர். இனிமேல் இதை ஞாபகப்படுத்த சுதா நாகர்கோவிலில் இருந்தோ, கீதா சென்னையிலிருந்தோ வரப் போவதில்லை. அவரவர்களுக்கு அவரவர் பாடு. பெண்களுக்குத் திருமணம் ஆகும் வரையில் தான் பிறந்த வீடு வெல்லக்கட்டி, யாரைக் குற்றம் சொல்ல முடியும்?

"பசிக்கலியா?" என்றாள் காவேரி. கேட்டு முடிப்பதற்குள் மென்று விழுங்க வேண்டியதாகிவிட்டது.

> "ஆடி மாதம் கோர்ட்டில் கேஸ் போடாதே என்று சொன்னேனே"
> "என்ன ஆச்சு?"
> "தள்ளுபடி ஆயிடுச்சு!"
> - எஸ். மோகன்

"ஒரு மூச்சா ஓழிச்சிட்டு சாப்பிடலாமே. லாரிக்காரன் என்னிக்கு வர்றான்?"

"நாளைக்கு கார்த்தால."

"சாரங்கன்?" வாய் பிழறியதா, இல்லை ஊறிப்போனதே வார்த்தையானதா தெரிய வில்லை. ஒரு நிமிடம் ராமமூர்த்திக்கு திக் என்றானது.

"சாரங்கன் இல்லைப்பா! வனமாலி" - காவேரி திருத்தினாள்.

"ஸாரி, வனமாலி எப்ப வர்றான்?"

"நாளைக்கு இன்டர்சிடியில் பதினோரு மணிக்கு."

"நாளைக்கே அழைச்சிண்டு போறானா?"

"ஆமாம். சாயந்திர வண்டியில் பெங் களூர் போய்த்தான் ரிஸர்வ் பண்றேனு ருக்கார்."

ராமமூர்த்தி திரும்பவும் தூசி தட்டக் கிளம்பினார்.

உதறிப் பார்த்துப் போடும்பொழுது ஏதோ ஒரு புஸ்தகத்தின் உள்ளிருந்து அவன் வாங்கிய கம்ப்யூட்டர் டிப்ளமா படிப்பின்

சான்றிதழ் விழுந்தது.

"இந்தா உன் கம்ப்யூட்டர் டிப்ளமா ஸர்டிஃபிகேட்."

"வனமாலி நான் மேற்கொண்டு வேலைக்குப் போக வேண்டாம் என்கிறார்."

"அவசரத்துக்கு உதவும்" ராமமூர்த்தியின் குரல் சுருதி இறங்கித் தெரிந்தது.

**சா**ரங்கனுக்குப் பின்னால் ஒரு வெறுமை எழுந்தது. காவேரியின் அம்மாவும், அப்பாவும் அண்ணா வீட்டுடன் இருக்கின்றனர். அண்ணன் கோவிந்தராஜனுக்கும் அப்படி பிரமாத வேலை இல்லை. முதலியார் ஒருவருக்குக் கணக்கு எழுதுகிறான்.



கோவிலில் பூஜை செய்கிறான். சின்னதாய் புரோகிதம் செய்கிறான். சாரங்கன் இரண்டு அக்காமார்களின் கல்யாணம், கார்த்தி என நொந்து போனதைப் போலத்தான் கோவிந்தராஜனும். அவனும் கல்யாணம், குழந்தை குட்டி என்றான பின்பு காவேரிக்கு அங்கே போய் நிற்கப் பிடிக்கவில்லை. சாரங்கனின் அப்பா ஒரு காரணமானார். வயதானவர். அறுபது வயதில் அவருக்குத் திக்கு தெரியவில்லை. இருபத்தியேழு வயசில் இவளுக்குத் திக்கு தெரியவில்லை. குருடனுக்கு நொண்டி துணை; சமாதானம்; ஆசுவாசம் எல்லாம்.

சாரங்கனின் க்ராஜுவிட்டி தொகைக்கும், இன்சூரன்ஸ் பணத்திற்கும் ராமமூர்த்திதான் அலுவலகம், அலுவலகமாக ஏறி இறங்கினார். சாரங்கனின் ஏழெட்டு வருஷ ஸர்வீசுக்கு ஆறாயிரமோ ஏழாயிரமோதான் வந்தது. தான் வாங்கும் பென்ஷன் இருவரின் சாப்பாட்டுச் செலவுக்கும் போதும் என்றும் மொத்த பணத்தையும் கட்டி ஆறுமாத கம்ப்யூட்டர் டிப்ளமா படிப்பு படிக்கச் சொன்னார்.

"அப்பா! நீங்க சொன்னது போல கம்ப்யூட்டர் டிப்ளமா படிச்சிருக்காட்டி வனமாலியைச் சந்திக்கும் சந்தர்ப்பமே கிடைக்காமல் போயிருக்கும்" என அவளே தனது சூன்யம் முற்றிலும் மறைந்த சந்தோஷத் தருணங்களில் வாய் விட்டுக் கூறியிருக்கிறாள்.

**ப**டுக்கையைச் சுற்றி, தாம்புக் கயிற்றினால் கட்டி வைத்து விட்டாள். பாயையும், ஒரு தலையணையையும் ராமமூர்த்தி இனி அவர் நிரந்தரமாகப் போய்த் தங்குவதாக முடிவாகி யிருக்கும் முதியோர் இல்லத்திற்கு எடுத்துப் போக வேண்டும்.

"நாழியாறதேப்பா! தட்டு வைக்கறேன். இறங்கறதோ, இல்லியோ ஒரு வாய் சாப்பிடுங்கோ."

தட்டில் சாதத்தைப் போட்டாள். மோர்க் குழம்பை விட்டாள். கொத்தவரை உசிலி போட்டாள். மோர்க்குழம்பு கொத்தவரை உசிலி ராமமூர்த்திக்குப் பிடித்த காம்பினேஷன்.

மூன்று வருடம் முன்னால் அகாலமாக சாரங்கன் தவறிப் போனான். மில் வேலை முடிந்து எட்டரை மணிக்குத் தான் திரும்பி வருவான். அப்பொழுது தொட்டே மாமனாருக்கும், மருமகளுக்கும் தான் பரஸ்பர துணை. நாள்பட்ட நெஞ்சு சளி நெஞ்சோடு உறைந்து, ஸ்வாசம் தடுமாறி சாரங்கன் இறந்து போனான். அன்றிலிருந்து இரண்டு வருடம் சமைப்பது, சாப்பிடுவது, உறங்குவது எல்லாமே மெஷின் நட வடிக்கையானது. வறண்டு போன வாழ்வு. ராமமூர்த்தியின் அரசுப் பள்ளி ஆசிரியர் வேலை காரணமாக வரும் பென்ஷன் இருவருக்கும் போதுமானதாக உள்ளது. செர்ரி ரோடில் இருக்கும் கம்ப்யூட்டர் மையத்தில் போன ஒரு வருடமாக வீட்டில் நாலு சுவரைப் பார்த்துக் கொண்டிருப்பானேன் என்று ராமமூர்த்தி சொன்னதன் பெயரில் வேலைக்கு என்று போகத் தொடங்கியபின்புதான் இலேசாகத் துளிர் விட்டது. சமையலில் ஈடுபாடு;

படிப்பதில் ஈடுபாடு; பேசுவதில் ஈடுபாடு. மோர்க்குழம்பு, உசிலி எட்டிப்பார்த்தது அப்பொழுதுதான். வனமாலி எட்டிப் பார்த்ததும் அப்பொழுதுதான்.

"ஆரம்பத்தில் நான் கூட அன்னிய புருஷா மத்தியில் வேலை செய்யணுமேன்னு பயந்தேன். நம்மைப் பத்தின தெளிவு இருந்தா நம்மைக் காப்பாத்திக்கலாம். என்னை இப்படி ஆக்கினதுக்கு உங்களுக்குத்தான் பாதபூஜை பண்ணணும்" என்றாள் ராமமூர்த்தியைப் பார்த்து.

"என் மாட்டுப் பொண்ணைப் பற்றி எனக்குன்னா தெரியும்" என ராமமூர்த்தியும் வெள்ளையாகச் சிரித்தார்.

"இது ஏது ருக்மணி, பாமா சமேத ஸ்ரீகிருஷ்ணரோட படம்?"

"எங்க கஸ்டமர் கொடுத்தது."

"காலண்டர் போடறவாளா?"

"இல்லை! சிவில் என்ஜினியர்."

"பேரு?"

"வனமாலியாம்."

"வனமாலியா? தென்கலையா?"

"அப்பா! நான் வாடிக்கையாளர் குலம், கோத்திரமெல்லாம் விசாரிப்பது இல்லை."

ஆனால் ராமமூர்த்தி விசாரிக்கக் கிளம்பினார். இருபத்து நான்கு வயதில் அவள் சாரங்கனின் கைப்பிடித்து இந்த வீட்டிற்குள் நுழைந்தாள். ஐந்தாறு வருஷம் வயிற்றில் எதுவும் உண்டாகவில்லை. மருந்து, மாந்திரீகம், பூஜை, க்ஷேத்ராடனம் எதற்கும் பயப்படாமல் கரு நழுவிக் கொண்டே இருந்தது. நடுவில் ஒரு வருஷம் ராமமூர்த்தியின் மனைவி கல்யாணி வாதம் வந்து படுத்த படுக்கையாகி ஒரு வருஷ சிச்ருஷை. ஏழாவது வருஷம் சாரங்கன் செத்துப் போனான். முப்பத்து நான்கு வயதில் பெண்ணாய்ப் பிறந்ததற்கு எந்த சுகமும் அனுபவிக்காத இந்த ஊமை ஜடம் வாசல் தெளித்து, காபி போட்டு, சமைத்து துணி துவைத்து, வீணாய்ப் போவது ராமமூர்த்தியை ஊசா முள்ளாய்க் குத்தியது. ஊசா முள் ஊசியானது. ஊசி ஈட்டியானது. இரவில் தூக்கம் போனது. தன் காலத்திற்குப் பின் மருமகள் என்ன ஆவாளோ என்ற நினைப்பு வெருட்டியது. இந்த வெருட்டலே வனமாலியின் குலம், கோத்திரத்தைத் தேடிப் போக வைத்தது.

வனமாலியின் சொந்த ஊர் சென்னை. அப்பா போஸ்ட்மாஸ்டராக உத்யோகத்தில் இருக்கும்பொழுதே தவறிப் போனவர். மூன்று அக்காமார்கள். அப்பா இறந்து போகும்பொழுது மூன்று பெண்களுக்குத் திருமணமாகவில்லை. வனமாலி ஒரு டிப்ளமா முடித்து, அரைகுறை சம்பளத்திற்கு அல்லாடி, அக்காமார்களைக் கல்யாணம் செய்து கொடுத்து முடிப்பதற்குள் பாதி கிழவன் ஆகிவிட்டான். நாற்பது வயசுக்கு மேல் அவனைக் கல்யாணம் செய்து கொள்ள உறவுக்காரர்கள் வற்புறுத்தினர். மறுத்துக் கொண்டே வந்தவனுக்கு காவேரியைப் பார்த்ததும் மனம் மாறியது.

"உங்களை நிராதரவா விட்டுட்டுப் போக எனக்கு சம்மதமில்லை."

"நீ வருத்தப்பட வேண்டாம். நான் இங்கே விசாரிச்சு வைச்சிருக்கேன். காந்தி ரோடில் விஸ்ராந்தி இல்லம் ஒண்ணு இருக்கு. எனக்கு இரண்டு பொண்களோடயும் போய் இருக்க வழியில்லை. சொற்ப பென்ஷன் வர்றது. சேமிச்ச வைச்ச பத்தாயிரம் இருக்கு. கொண்டு கொடுத்துட்டு

'லதா மங்கேஷ்கர் மெடிக்கல் ஃபவுண்டேஷன்' என்ற பெயரில் பூனா நகரத்தில் பெரிய மருத்துவமனையைக் கட்டியிருக்கிறார் லதா மங்கேஷ்கர். அந்த மருத்துவமனையின் நுழைவாயிலில் இருக்



கும் சின்ன பிள்ளையார் கோயிலில் தினமும் பூஜை, பஜனை நடக்கிறது. அந்தப் பிள்ளையார் சிலையில் ஒரு விசேஷம். அது, சிவாஜி கணேசன் தங்கை லதாவுக்காக அன்புடன் பரிசளித்தது!

- அஜய்

என்னால முடிஞ்ச உபகாரத்தைப் பண்ணிண்டிருக்கேன். நீ எது பத்தியும் வனமாலியிடம் வாய் திறக்காதே. என் மாமனார் என்ன ஆவாரோன்னு ஒரு குற்ற உணர்ச்சியை அவனுக்கு ஏற்படுத்தாதே. நீயும் வருத்தப்பட்டுண்டு நிக்காதே. இரத்தல் என்பது நல்ல நிலையில் இருந்தாலுமே பெண்களுக்குத் தவிர்க்க முடியாமல் உள்ளது. நீ மறுவிவாகம் பண்ணிக்கப் போறே. எத்தனை விஷயத்துக்குன்னு இரந்து நிற்ப? சந்தோஷமா கல்யாணம் பண்ணிண்டு கிளம்பு."

ராமமூர்த்தி சொன்னது போலதான் நேர்ந்தது. வனமாலி தன் வயதான தாயாரையும், இரண்டு சகோதரிகள் குடும்பத்தினரையும் அழைத்து வந்து சம்பிரதாய பேச்சுகளை முடித்து, எந்தவித ஆடம்பரமும் இல்லாமல் சின்ன திருப்பதியில் கல்யாணம், ஹோட்டலில் சாப்பாடு என முடிந்தது கல்யாணம். ராமமூர்த்தியைப் பற்றி வாய் திறக்க சந்தர்ப்பமே அமையவில்லை. அவனுடன் தனிமையில் இருந்த கணத்தில் சொன்னாள். "அப்பாவை நினைச்சாத்தான் கஷ்டமா இருக்கு. நான் இல்லாம எப்படி இருக்கப் போறாரோ?" என்றாள் மெதுவாக. அவன் அதைப் பெரிதாக எடுத்துக் கொண்டு இவள் மனத்தின் இசைவுக்கு ஏற்ப ஒரு நல்ல பதிலாகச் சொல்லாமல் போனது அவளுக்கு வருத்தமானது. அந்த வருத்தம்தான் இத்தனைக் குமைச்சல்களுடன் வீட்டை ஒழிக்கும் பொழுது வெளிப்படுகிறது.

தூக்கமில்லாமல் இரவு நீண்டு கொண்டே போனது. எப்பொழுது தூங்கினாள் எனத் தெரியாது. மறு நாள் காபி, டிஃபன் எல்லாமே வெளியில்தான் ஏற்பாடானது. பதினொரு மணிக்கு வனமாலி வந்தான். பேச்சு அதிகமில்லாமல் நேரம் ஊர்ந்தது. கட்டி வைத்த அனைத்துப் பொருட்களும் ஹாலுக்கு வந்தாயிற்று. உள்ளறையில் ராமமூர்த்தியின் படுக்கையும், சூட்கேஸும் மட்டும் அப்படியே இருந்தது.

"ஏன் இது மட்டும் தனியா இருக்கு?" என்றான் வனமாலி.

"அப்பாவோடது" என்றாள் காவேரி.

"அதுதான் ஏன் தனியா இருக்குங்கறேன்?"

ஒரு நிமிஷம் காவேரிக்குப் பரபரப்பானது.

"என்ன சொல்றீங்க?" என்றாள்.

"லாரியில் அப்பாவோடதையும் ஏத்தி வைக்கச் சொல்லு! பெங்களூருக்கு சாயந்திரம் இண்டர்சிட்டியில் மூணு டிக்கட் ரிசர்வ் பண்ணிருக்கேன். அப்புறம் எதுக்கு அவரோடது மட்டும் தனியா?"

"நீங்க சொல்லவே இல்லியே?"

"எதுக்கு சொல்லணும்? தனியாச் சொல்ல இது பெரிய விஷயமா? சாதாரண விஷயமில்லையா?"

காவேரியால் அவன் கைகளைப் பற்றியபடி அழ மட்டும்தான் முடிந்தது. ●

கல்கி வைரவிழா
போட்டியில்
இரண்டாம் பரிசு
ரூ.750 பெறும்
தமாஷ் ஹைகூ.



**பின்னோக்கிச் செல்லும்போது...**
**வாகனம் வாசிக்கும் இசையில்**
**'தேச பக்தி'!**

**- லிடியா இம்மானுவேல்**

# தாகம் தீர்க்கும் மூன்றெழுத்து!

மனுக்களை வாங்கிக் கொண்டு 'பார்க்கிறேன்' என்று கித்தாப்பாக மழுப்பி விடும் அரசியல்வாதியல்ல அவர். 'எவ்வளவு செலவாகும்?' என்று கேட்டுவிட்டு நைஸாக நழுவி விடும் பழக்கமும் அவரிடம் இல்லை. காதில் செய்தியை வாங்கிவிட்டால்போதும் அடுத்த நிமிடம் காரியம் நடந்து விடும். அவர்தான் வீகேயென்!

சிவகங்கை மற்றும் திருச்சி மாவட்டங்களில் பல பள்ளிகள் 'வீகேயென்' பெயரைச் சொல்லி தாகம் தணித்துக் கொண்டிருக்கின்றன.

மின் வசதி உள்ள பள்ளி என்றால் மோட்டாரும், மேல் நிலைத் தொட்டியும், மின் வசதி இல்லையென்றால் 'அடி பம்ப்' என்றும் இலவசமாகக் குடிநீர் வசதி செய்து தந்துள்ளார் வீகேயென் கண்ணப்பன்.

''அரசாங்கத்திடம் குடிநீர் வசதி கேட்டுச் சென்றால் திட்டம், நிதி ஒதுக்கீடு என்று கால தாமதாகும். அப்புறம் அரசியல் தலையீடு வேணும். இதெல்லாம் எதுக்குன்னு என்னால் முடிந்த உதவியை நானே செய்றேன். பள்ளிக் குழந்தைகளுக்குச் செய்து கொடுக்கிற வசதிங்கறதாலே வோட்டு வாங்க செய்யப்படும் காரியம்னும் பேசுவராது.'' என்கிற வீகேயென் கண்ணப்பன் திருச்சி துவாக்குடியில் பதினாறு தொழில் நிறுவனங்களின் அதிபர்.

போர்வெல் போட்டு பணி முடிக்கும் வரை அந்த ஊர்க்காரர்களிடமோ, பள்ளி நிர்வாகிகளிடமோ எந்த உதவியையும் வீகேயென் பணியாளர்கள் கேட்பதில்லை. தாங்களாகவே விரும்பி ஒரு டீ, வாங்கிக் கொடுத்தால் கூட குடிக்க மறுத்துவிடுவதாக பொதுமக்கள் அன்புடன் புகார் செய்கிறார்கள்.



'வீகேயென்' அமைத்துக் கொடுத்த அடி பம்ப்போ, மோட்டாரோ பழுதடைந்துவிட்டால் சம்பந்தப்பட்ட பள்ளி தலைமை ஆசிரியர் ஓர் அஞ்சலட்டையில் எழுதி அனுப்பினாலே போதும் ஒரு வாரத்திற்குள் பழுது நீக்கி, செயல்பட வைத்துவிடுகிறார்கள். இதற்கென்று தனியே ஒரு பணியாளர் குழுவே பரபரப்பாக இயங்குகிறது.

''1989ம் வருடத்திலிருந்து இன்று வரை 300 பள்ளிகளுக்குக் குடிநீர் வசதி செய்து கொடுத்திருக்கிறேன். எல்லாமே நல்ல நிலையில் இயங்கிக் கொண்டிருக்கின்றன'' என்கிறார் கண்ணப்பன்.



முன்னாள் முதல்வர் கலைஞரின் தமிழ் மீது அளவு கடந்த பாசம் கண்ணப்பனுக்கு. கண்ணப்பனின் சேவை உள்ளத்தால் கவரப்பட்டு பலமுறை அவரை அரசியலுக்கு இழுக்கவும் முயற்சி செய்தாராம் கலைஞர்.

''எப்போதும் அண்ணனுக்குத் தம்பியாகவே இருக்க விரும்புகிறேன்'' என்ற பதிலோடு நழுவி விட்டாராம் வீகேயென் கண்ணப்பன்.

— கி. சிங்காரவடிவேல்

# தேவ மருந்து 2

**'ஆயுர்வேதம் என்னும் அற்புத மருத்துவ சிகிச்சையை தேவர்களிடமிருந்து கற்றுக் கொண்டு வந்த மகரிஷி யார்?' என்ற பரிசுக் கேள்விக்கான விடை: பரத்வாஜர்.**

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஹிமாலய பர்வதத்தில் வாழ்ந்த எல்லா ரிஷிகளும் ஒன்று கூடி, பரத்வாஜரைத் தேர்ந்தெடுத்தனர். எதற்கு? இந்திரனிடம் சென்று ஆயுர்வேத மருத்துவமுறையைக் கற்றுணர்ந்து மக்களுக்கு சேவை செய்வதற்காக. அந்த முறையில், உலகிலேயே நடந்த முதல் மருத்துவக் கருத்தரங்கம் நம் இந்தியாவில் நடந்ததுதான் எனவும் பெருமையாகச் சொல்லலாம்.

ஆயுர்வேத மருத்துவக் கலையை சிருஷ்டி தேவனாகிய பிரம்மாவிடமிருந்து தக்ஷப்ரஜாபதி, தக்ஷப்ரஜாபதியிடமிருந்து அஸ்வினி குமாரர்கள் (இருவர்) அஸ்வினி குமாரரிடமிருந்து இந்திரன், இந்திரனிடமிருந்து பரத்வாஜர் என வழிவழியாக தேவ ரிஷி பரம்பரையாகக் கற்றனர் என்பதால்தான் இந்த ஆயுர்வேதத்துக்கு அவ்வளவு மகாத்மியம். அதேபோல, மகாவிஷ்ணுவின் அவதாரமாகிய தன்வந்திரி மகரிஷி, அறுவை சிகிச்சையை மேம்படுத்தினார். இன்றைக்கும் மருந்து மாத்திரை சாப்பிடும்போது, "தன்வந்திரியே நமஹ" என்று சொல்லிவிட்டு, எடுத்துக் கொள்ளும் பழக்கம் பலருக்கு உண்டு. பெருமாள் கோயில்களில் தன்வந்திரிக்கு என தனி சந்நிதியை நாம் பார்த்திருக்கிறோம்.

ஆயுர்வேதத்துக்கு முக்கிய கண்ணோட்டங்கள் இரண்டு. ஒன்று 'ஸ்வஸ்த சம்ரக்ஷணம்' மற்றொன்று 'ரோக நிவாரணம்'

'ஸ்வஸ்த்த ஸம்ரக்ஷணம்' என்றால் ஆரோக்கியமாக உள்ள ஒருவன், எந்த நோயிலும் சிக்காமல், தன்னுடைய ஆரோக்கியத்தை நிலை நிறுத்துவது.

'ஆர்த்தஸ்ய ரோக நிவாரணம்' - இது நோய் வந்த பின்பு, குணப்படுத்துவது.

ஆரோக்கியத்தைப் பேணிக் காக்கவும், வந்த நோயை நீக்கவும், ஆயுர்வேதத்தில் எட்டு அங்கங்கள் உள்ளன. இதற்கு அஷ்டாங்கம் என்று பெயர். புகழ் பெற்ற ஆயுர்வேத நூல் ஒன்றின் பெயர் 'அஷ்டாங்க ஹ்ருதயம்' என்பதாகும்.

டாக்டர் எல். மகாதேவன்



கேரளாவில் 'அஷ்ட வைத்தியர்கள்' என்றிருக்கிறார்கள். எட்டுவிதமான மருத்துவப் பிரிவுகளிலும் தேர்ச்சி பெற்றவர்கள் என்பதால் இந்த அடைமொழி.

இந்த அஷ்டாங்கத்தை வைத்து, உங்களுக்கு எவ்விதமான சிகிச்சை அவசியம் என்பதை வெகு சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம்.



• அஸ்வினி தேவர்கள் ஷ்யவனருக்கு ரஸாயனம் வழங்குகிறார்கள்

முதல் சிகிச்சை என்றாலே, முக்கியமானதாகத்தானே இருக்கும். எட்டுப் பிரிவுகளில் தலையாயது 'காய' சிகிச்சை.

'காயம்' என்ற வார்த்தைக்கு 'அக்னி' என்று பொருள். 'காயம்' என்ற வார்த்தைக்கு 'உடம்பு' என்ற பொருளும் உண்டு. 'காயமே இது பொய்யடா..!' என்று சொல்கிறோம்.

'காயம்' என்று சொன்னால் 'அக்னிசக்தி' என்று பொருள். உடம்பின் ஆகார பரிணாமத்தை, அக்னி சக்தி நிர்ணயிருக்கிறது. இந்த அக்னி சக்தியானது கெட்டுப் போய், சீரழிவதால் சில நோய்களை உண்டாக்கும். இதற்குப் பரிணாம நோய்கள், அதாவது 'மெடபாலிக் டிசீஸஸ்' என்று பெயர்.

சர்க்கரை நோய், கொலஸ்ட்ரால் போன்றவை பரிணாம நோய்கள். அக்னி எனப்படும் காய தத்துவம் சரியாக இயங்காததால், இப்படிப்பட்ட நோய்கள் வருகின்றன.

இந்த அக்னியை உத்தீபனம் செய்து, ஜீரண சக்திக்கு முக்கியத்துவம் கொடுத்து, ஜீரண சக்தியின் ஏற்ற தாழ்வுகளுக்ேற்ப வரக்கூடிய நோய்களுக்கு சிகிச்சை தரும் பகுதி - 'காய சிகிச்சை' எனப்படும்.

இரண்டாவது பிரிவு 'பால சிகிச்சை' கௌமார ப்ருத்யம்... பாலன் என்றால் குழந்தை என்று அர்த்தம். இது குழந்தைகளுக்கான மருத்துவப் பிரிவு என்றாலும், ஒரு பெண், கர்ப்பம் தரித்த காலத்திலிருந்தே சிகிச்சை தொடங்குகிறது. கர்ப்பிணி சம்ரக்ஷணம், (கர்ப்பிணியைப் பாதுகாக்கும் முறை), பிறந்த குழந்தையைப் பேணும் முறை, ஜாத கர்மம் - 'வேதிக் ரிச்சுவல்ஸ்' என்று சொல்லக்கூடிய வேத முறை குழந்தை பாதுகாப்பு, 'பாலரோகம் - குழந்தைக்கு வரக் கூடிய நோய்கள், அதற்கான சிகிச்சை முறைகள் என மிக விரிவாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது.

அடுத்து வருவது கிரக சிகிச்சை. இது நவீன

மருத்துவத்தில் கிடையாது. நவ கிரகங்களின் பெயர்ச்சியையும், சூழலையும் வைத்து, மனிதனின் ஆரோக்கியம் பாதிக்கப்படும் என வேத சாஸ்திரம் சர்வ நிச்சயமாக நம்புகிறது. ஜோதிட சாஸ்திரம் சொல்லும் பலன்கள், பஞ்ச பூதங்களில் ஏற்படும் ஏற்ற தாழ்வுகள், அதனால் வரும் நோய்கள், அதற்குரிய சிகிச்சை முறைகள் என துல்லியமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

கிரக சிகிச்சையில் மனச்சிதைவு, உன்மாதங்கள், வலிப்பு நோய் எனப்பட்ட அபஸ்மாரங்கள் என பலதரப்பட்ட நோய்களுக்கு கிரக சிகிச்சை முறை அருளப்பட்டுள்ளது.

நான்காவது, ஊர்த்துவாங்க சிகிச்சை. 'ஊர்த்துவம்' என்றால் 'கழுத்துக்கு மேலே உள்ள பகுதி' என்று அர்த்தம். கண், காது, மூக்கு, தொண்டை, பல் மருத்துவம் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

அடுத்து வருவது 'சல்ய சிகிச்சை' எனப்படும் அறுவை சிகிச்சை இன்றைக்கும், பொது மக்கள் பரவலாகக் கேட்கும் கேள்வி, "ஆயுர்வேதத்தில் அறுவை சிகிச்சை உள்ளதா?" என்பதுதான். சர்ஜரி தொடங்கியதே ஆயுர்வேதத்தில்தான் என்பதற்கு அநேக ஆதாரங்கள் உள்ளன. சுஸ்ருதர்தான் அறுவை சிகிச்சை மருத்துவத்தின் தந்தை (Father of Surgery). இவர் அந்தக் காலத்திலேயே பிளாஸ்டிக் சர்ஜரி செய்வதிலும் தேர்ச்சி பெற்றிருந்தார் என அறிகிறோம்.




"தலைவர் தம்புசாமியோட பேரை என்ன 'தடா பொடா தம்புசாமி'ன்னு நோட்டீஸ்ல போட்டிருக்காங்க?"

"அதுவா...! அவர் 'தடா'வுல ஒரு முறையும், 'பொடா'வுல ஒருமுறையும் கைதாகி இருக்காராம்...!"

— சீர்காழி வி. ரேவதி

விஸ்வாமாத்திர மகரிஷியின் மகனாகிய சுஸ்ருதர், காசியில், தன்வந்திரியிடமிருந்து ஆயுர்வேதம் மற்றும் அறுவை சிகிச்சையைக் கற்றுணர்ந்தார். பின்பு தமது அனுபவத்தை எல்லாம் திரட்டி, 'சுஸ்ருத சம்ஹிதை' என்ற நூலை எழுதினார். இதில் நூற்று எண்பத்து ஆறு அத்தியாயங்கள் உள்ளன. இதில் யந்திரங்கள், அறுவை சிகிச்சை முறை, அறுவை சிகிச்சைக்கான உபகரணங்கள், எந்தெந்த நோய்க்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்ற குறிப்பு உள்ளது. உதாரணமாக சிறுநீரகக் கற்கள், மூலம் போன்ற நோய்களை, அறுவை சிகிச்சை மூலம் முற்றிலும் குணப்படுத்தி விடலாம் என சொல்லப்பட்டுள்ளது.

அடுத்து சொல்லப்பட்ட சிகிச்சை 'தம்ஷ்ட்ரா சிகிச்சை. தம்ஷ்ட்ரா என்றால் விஷம் என்று பொருள். அந்தக் காலத்தில் விவசாயம் செய்தவர்களும், காட்டுப் பகுதிகளில் வசித்தவர்களும் அதிகம் என்பதால், பாம்பு, தேள், விஷப்பூச்சிகளின் கடி, விஷ அம்சமுள்ள பச்சிலைகள், அரளி, ஊமத்தை போன்ற கொடிய விஷங்களுக்கு சிகிச்சை தரும் முறைக்கு தனி பகுதியே ஒதுக்கப்பட்டுள்ளது.

இப்போதெல்லாம் ஜீரியாட்டிரிக்ஸ் என்ற முதியோர் நல பராமரிப்பு சிறப்பு கவனம் பெற்று வருகிறது. ஆயுர்வேத காலத்திலேயே முதுமை நோய்களுக்காக தனி பிரிவிருந்தது தெரிய வரும்போது, ஆச்சரியமாக இருக்கிறது. 'ஜரா' என்றால் வயதாகும் தன்மை. ஆயுர்வேதத்தைப் பொறுத்தவரை, வயதாகும்போது ஏற்படும் நோய்களுக்கான சிகிச்சை முறைக்கு எவ்வளவு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளதோ, அதே அளவு முக்கியத்துவம் வயதாவதைத் தவிர்ப்பதற்கும் தரப்பட்டிருக்கிறது!

கடைசி பிரிவில் வருவது விருஷ சிகிச்சை. ஆண்மை சக்தியை அதிகரித்து, தாதுவிருத்தி செய்து, ஆரோக்கியமான நன்மக்களைப் பெறுவதற்கான சிகிச்சை முறைகள் தரப்பட்டுள்ளன.

மருத்துவரை நாடி, ஒரு நோயாளி வரும்போது, நோய் நாடி, நோய் முதல் நாடி, அஷ்ட அங்கங்களில் நோயாளிக்கு மிகவும் பலன் தருவதை நாடி, சிகிச்சை மேற்கொள்ளப்படுகிறது. இப்போதெல்லாம் 'ஹோலிஸ்டிக் அப்ரோச்' என நவீனமாகச் சொல்கிறார்களே, அது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தேவ மகரிஷிகளால் கண்டறியப்பட்டதுதான்.

**இந்த வார மருத்துவக் கேள்வி: - இளமையாக இருப்பதற்கும், முதுமை அண்டாமல் இருப்பதற்கும் எடுக்கப்படும் சிகிச்சை, அஷ்டாங்கத்தில் எந்தப் பிரிவில் வருகிறது என யூகிக்க முடிகிறதா?**

● தமிழ்நாடு கிரிக்கெட் சங்கத் தலைவர் தேர்தல் ஓர் அரசியல் தேர்தலைப் போலவே நடந்து முடிந்துள்ளது. மிக ஆச்சர்யத் தக்க விதத்தில் 'இந்தியா சிமெண்ட்ஸ்' சீனிவாசன் வெற்றி பெற்றிருக்கிறார். இவர் மத்திய அமைச்சர் மாறனின் நெருங்கிய நண்பர். இதுவரை தலைவராக இருந்தவர் ஏ.ஸி. முத்தையா. அம்மாவுக்கு வேண்டியவர். ஆனால் இந்த முறை முத்தையா போட்டியிடவில்லை. அவரது சகாவின் செயலாளர் கும்பட், தலைவர் தேர்தலில் போட்டியிட்டார். எலியும், பூனையுமாக இருந்த சீனிவாசனும், முத்தையாவும் கை கோத்துக் கொண்டது எப்படி? 'ஒரு தமிழன் வரட்டும்' என்று இருவரும் இணைந்து விட்டார்களாம்! "இந்த கார்ப்பரேட் கல்யாணம் எதைக் காட்டுகிறது என்றால், உண்மையில் பின்னணியில் இருக்கும் அரசியல் எதிரிகள் ரகசிய உடன்பாட்டை எட்டி விட்டார்கள் என்பதைத்தான்" என்றும் சொல்கிறது கிரிக்கெட் வட்டாரம்.

# பங்கு போடப்பட்ட பர்மிட்!

* ஏ.ஸி. முத்தையா

* வைகோ

* நத்தம் விஸ்வநாதன்

● சிறையிலிருக்கும் வைகோ புரட்சியாளர்கள், தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படிப்பது தவிர, 'பொடா' மற்றும் கிரிமினல் சட்ட புத்தகங்களைப் படித்து குறிப்பு எடுத்து வைக்கிறார். "பொடா கோர்ட்டில் அவரே வாதம் செய்யக்கூடும்" என்கிறார் ம.தி.மு.க பிரமுகர் ஒருவர். 'இதற்கிடையில் புலிகள் ஆதரவு பிரச்னையிலும் வைகோ இரட்டை வேடம்தான் போடுகிறார்' என்று விளக்கும் வகையில் சிவகாசி தொகுதியில் பிட் நோட்டீஸுகள் விநியோகிக்கப்படுகின்றனவாம். "உண்மையிலேயே அவர் புலிகளுக்கு ஆதரவாளர் என்றால், 'பொடா' சட்டம் பாராளுமன்றத்தில் விவாதத்துக்கு வந்தபோது, "புலிகள் அந்தச் சட்டத்தின் இணைப்பில் சேர்க்கப்பட்டதை எதிர்த்துப் பேசியிருக்க வேண்டும். ஆனால் வாய்மூடி மௌனமாகி விட்டார். இது தவிர தேர்தல் காலங்களில் அவர் புலிகளைப் பற்றி வாயே திறப்பதில்லை" என்ற நோட்டீஸில் பல பாயிண்டுகள் இருக்கின்றனவாம். 'பொடா' சட்டத்தை எதிர்த்து கோர்ட்டுக்குப் போவதாக இருந்தது ம.தி.மு.க. "மிகக் கஷ்டப்பட்டு இந்தச் சட்டத்தை பாஸ் செய்திருக்கிறோம். கோர்ட்டில் ஒன்றிரண்டு அம்சங்களை மிகக் கடுமையானது என்று 'கட்' பண்ணிவிட்டால் சட்டம் நீர்த்துப் போய்விடும். எனவே வழக்கைச் சந்தியுங்கள்; பொதுவாக 'பொடா'வை சேலஞ்ச் செய்ய வேண்டாம்" என்று பி.ஜே.பி கேட்டுக் கொண்டதால் கோர்ட்டுக்குப் போவதாக இருந்ததைக் கைவிட்டு விட்டார்கள்.

● சமீபத்தில் போக்குவரத்து அமைச்சர் நத்தம் விஸ்வநாதன் அறையில் மதுரையைச் சேர்ந்த கட்சிக்காரர் ஒருவர், "ஷேர் ஆட்டோ ஓட்ட பர்மிட் வேண்டும்" என்று உரிமைக் குரல் கொடுக்க அமைச்சரோ கைவிரித்து விட்டார். "மதுரை நகருக்கென்று ஐம்பது ஷேர் ஆட்டோ பர்மிட் கொடுத்தோம். ஆனால் ஆர்.டி.ஓ அலுவலக அதிகாரிகளே 'ஷேர்' போட்டுக் கொண்டு பர்மிட்டைப் பங்கு போட்டுக்கொண்டு விட்டார்கள்" என்று அமைச்சரே புலம்புகிறாராம்.

— சஞ்சயன்

படங்கள்: சௌரா

## ● காதில் விழுந்தவை!

'தொடரும் ஆதீன மர்மங்கள்' கட்டுரையின் தொடர்ச்சியில், திருவாவடுதுறை ஆதீனத்தில் 'தெ.போ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை' தமிழ்ப்பணி ஆற்றியதாக எழுதியுள்ளார். இது தவறான தகவலாகும். திருவாவடுதுறை ஆதீனப் பெரும் புலவராக இருந்து தமிழ்ப் பணியாற்றியவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. இப் பெரும் புலவரே தமிழ்த்தாத்தா உ.வே.சா மற்றும் பேராசிரியர் தியாகராச செட்டியார் போன்ற பெரும் தமிழறிஞர்களின் ஆசான்.

கோவை-6, இரா. நாகராசன்.

சிறுகதைகளின் தலைப்பை, புதுமையாக அமைத்த உங்கள் எண்ணத்திற்கு ஒரு சபாஷ்!

திருப்பத்தூர், புதூர.க. முருகையன்.




## நிஜமோ நிஜம்!

'ஆகாம், ஏவாள், ஆதி, தியரி' என்ற நல் வாழ்வு நோக்குத் தொடர் நகைச்சுவையும் கலந்து பரிணமித்தது.

ஹைதராபாத், கே.ஆர். விஜயராகவன்.

நான் ஒரு சீனியர் சிடிசன் என்பதால் கூட்டுக் குடும்பம் பற்றியும், தனிக் குடித்தனம் பற்றியும், தண்ணீர்ப்பட்ட பாடாய்த் தெரியும். இல்லறத்தில் இன்பம் வேண்டுமானால், கணவன் - மனைவி உறவு 'இலை மறைவு, காய் மறைவாக' இருந்தால்தான் நல்லது என்பது நிஜமோ நிஜம்!

பாண்டிச்சேரி, கே.எஸ். ராமையா.

★ நிலவின் பிம்ப ஒளி நீரின் மேல்பட்டு அசைவதால், நிலவு ஒன்றும் நகர்வதாக அர்த்தமில்லையே? அதுபோல தாம்பத்ய வாழ்வில் சண்டையும், சச்சரவும் இருப்பது அன்பை மேலும் பலப்படுத்தவே உதவும் என்ற கருத்தைச் சுவைபட சொன்ன கட்டுரையாளருக்குப் பாராட்டு.

ஆத்தூர், ஹரிபிரியன்.

★ பணத் தேவையைவிட மனத்தேவை அதாவது இமோஷனல் சப்போர்ட் எந்தப் பெண்ணுக்கும் அவசியம் தேவை. அடிக்கப் பிடிக்க, சண்டைப் போட்டால் கூட பெண்கள் தாங்கிக் கொள்வார்கள். ஆனால் புறக்கணிக்கப்பட்டால் அந்த நிராகரிப்பு அவர்களை நிரந்தரமாக காயப்படுத்தி விடும் என்பது அப்பட்டமான உண்மை.

திருப்பனந்தாள், ஜி. மதுரபாஷினி.

★ பதினொரு வாரங்களாக, பக்கத்து வீட்டுச் சகோதரி பேசும் பாணியில் ஆண், பெண் உறவு பலப்படுவதற்காகத் தரப்பட்ட மனித நேயத் தொடர் அருமை. ஹாட்ஸ் ஆஃப் டு அனுராதா சேகர்.

நெய்வேலி-3, க. சுந்தர்.

பருவ மழை பொய்த்த போதும், 'கல்கி'யில் கவிதை மழை கண்டு எங்கள் நெஞ்சம் நனைந்தது.

மதுரை, சி.எம். குமார்.

# நல்லோர் நெஞ்சில் நஞ்சு!

✉ சைவத்திற்கும், இந்துமதத்திற்கும் பெருமை சேர்க்க வேண்டிய மடாதிபதிகள். இப்படி மல்லுக்கு நிற்பது தமிழுக்கு மட்டு மல்ல; சைவ தர்மத்திற்கே அவமானம். நல் லோர் நெஞ்சிலெல்லாம் நஞ்சு பாய்ச்சி விட் டது.
மதுரை - 14, நெல்லை வி. கோபாலன்.

✉ மீசைக்கார அப்பாவிற்கு, தூது போ முத் தமே என்பதைப் பற்றி என்ன சொல்ல. மூன்று சிறுகதைகளுமே முக்கனிகளின் சுவையாய் இருந்தன.
கோவை - 30, சித்ரா மணாளன்.

✉ பல்வேறு பத்திரிகைகளில் 'வைகோ' கைதைக் கண்டித்தும், பொடாவைத் தாக் கியும் விமர்சனம் வந்த வேளையில் 'வைகோ' கைது பற்றிய விளக்கத்தையும், 'பொடா'வைப் பற்றிய விவரத் தையும் விளக்கியிருந்த விதம் அருமை.
திருவாரூர், ஆர்.ஆர்.எஸ். மணி.

✉ 'புலி வருது புளி' கற்பனையில் 'புலிட் ஸர்' பரிசு பெற்றவரையும் பொடா சட்டத் தின் கீழ் கைது செய்யலாம் என்று சொல் லாமல் விட்டு விட்டாரே!
சென்னை -1, கே.ஆர். உதயகுமார்.

✉ 'வைகோவின் எதிர்காலம்' தலையங் கம் படித்தேன். வைகோவுக்கு இவ்வளவு தூரம் வேறு யாரும் அனுசரணையாக அறிவுரை சொல்ல முடியாது.
மொரட்டுப்பாளையம்,
க.நா. இராஜேஸ்வரன்.

✉ அனைவருக்கும் கல்வித் திட்டம். ஜெ பாணி கார்ட்டூன் சூப்பரோ சூப்பர்!
ஔவையார்பாளையம், ஏ.எஸ். யோகானந்தம்.

# வட்டமேஜை

# ஆனந்தம்... அமிர்தம்...

✉ முருக பக்தர்களின் இல்லந்தோறும் இருக்க வேண்டிய புனித தொகுப்பு.
அயன்புரம், த. சத்தியநாராயணன்.

✉ பழனி பஞ்சாமிர்தம் போன்ற இனிய, பயனுள்ள தொடர்.
பெங்களூர், என்.கே. ஈசுவரி.

✉ குருஜி ஏ.எஸ். ராகவனின் அற்புதமான எழுத்தில் நெகிழ்ந்தேன்.

வெயிலை உகந்தே அமர்ந்த முழுமுதலாம்
வேழமுகனுக்குப் பின் பிறந்தோனே!
மயிலைநல் வாகனமாய்க் கொண்டு
மலைகள் தோறும் அமர்ந்த குமரேசா!
துயிலை மறந்தே அமர்ந்து ஒருமனதாய்
துதிக்கும் அன்பர் வேண்டும் வரம்
அருள்வோனே!
கயிலை மலை மீதிலமர் கடவுளர் தம்
கண்ணென ஒளிர் இளைய
பெருமானே!! முருகப் பெருமானே!

-திருப்புகழை அடியொற்றி என்னில் உதித்த இறைபுகழ் பாடல்!
கோவை-11, சீதாலக்ஷ்மி

✉ திருப்புகழ் அமுதத்தையும், மற்ற தமிழ்க் குறவர்கள் பாடிய அருங்கவி தைகளையும் கண்டுகளித்தேன்.
விழுப்புரம், த. கிருஷ்ணசிங்



✉ முப்பத்தைந்து வார மாக எங்கள் உள்ளத்தை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த் திய குருஜியின் 'தலம் தோறும் தமிழ்க் கடவுள்' தொடர் அருமை. அற் புதம், ஆனந்தம், அமிர் தம்.
சென்னை - 93,
ஆர். முரளி

✉ குருஜி ராகவன் எழுதிய முருகன் தொடர் பிரமாதம். கோடம்பாக்கம் என்ற சொல்லுக்கு அர்த்தமே இப்பொழுதுதான் புரிந்தது.
சென்னை, நடராஜன்.

# படிச்சுமை

"ஏ மூதி, எழுந்துருல. வண்டி வர்ற நேரமாச்சு" என்று அம்மா கத்துவது கேட்டவுடன், மெல்ல எழுந்து கண்ணைத் தேய்ச்சுக்கிட்டேன். இன்னும் கொஞ்ச நேரம் தூங்கலாம்னு ஆசையா இருந்துச்சு. ஆனா அது முடியாது. தீப்பெட்டி கம்பெனி பஸ் வந்துடும்.

"சீக்கிரம் பல்லு தேய்ச்சிட்டு, டப்பாவுல சோறும், ஊறுகாயும் வைச்சிருக்கேன். எடுத்துக்கிட்டுக் கிளம்பு."

பல் தேய்ச்சிட்டு வந்தப்போதான், மறுநாள் ஞாயித்துக் கிழமைனு ஞாபகம் வந்துச்சு. வாராவாரம் வரும் சின்ன சந்தோஷம் அது.

"ஏ, காந்திமதி கிளம்பிட்டியா? சீக்கிரம் வா, நேரமாச்சு"_ சங்கரியக்கா வந்துட்டா போலிருக்கு.

அவசரமா முகத்தைத் துடைச்சுக்கிட்டு, சாப்பாடு டப்பாவை எடுத்துக்கிட்டு சங்கரியக்காவுடன் கிளம்பினேன்.

தெருவில் இன்னும் வெளிச்சம் வரலை. போற வழியில தெருவில கட்டில் போட்டும், திண்ணையிலும் தூங்கறவங்களைப் பார்க்கப் பார்க்க, பொறாமையா இருந்துச்சு.

"நெதமும் விடியல்ல வேலைக்குப் போனா திரும்பிவர சாயங்காலமாயிடும். காலையிலே போகும் போது போற வழியில் எல்லாரும் தூங்கறது மாதிரி, திரும்பி வர்றயில்ல, சின்ன பிள்ளைங்க சத்தமா படிச்சுக்கிட்டிருக்கும். நானும் படிச்சிருந்தா இப்ப எட்டாவது படிச்சிருப்பேன். ம், எல்லாத்துக்கும் கொடுப்பினை வேணும்.

ஸ்கூல்ல அஞ்சாவது படிக்கும் போது ஒருமுறை ஸ்கூல் இன்ஸ்பெக்டர் வந்திருந்தாரு. அவரு பாடத்திலே கேட்ட கேள்விக்கு எல்லாம் சரியா பதில் சொன்னதும், "வெரிகுட், நீ படிச்சுட்டு என்னவாக விரும்பற?'னு கேட்டார். டக்குன்னு 'கலெக்டர் ஸார்'னு சொன்னது நினைவுக்கு வந்துச்சு.

ஹூம்! ரொம்ப படிக்காவிட்டாலும், குறைஞ்சது பத்தாங்கிளாஸாவது படிச்சிருக்கலாம்.

"டீ காந்திமதி, நாளைக்கு டீ.வில ரஜினி படமாம்"னு சங்கரியக்கா முகமெல்லாம் சிரிப்பாகச் சொன்னவுடன் பழைய நினைப்பு கலைஞ்சது.

"ஏய், என்ன தூக்கக் கலக்கமா?"னு உலுக்கினாள்.

"இல்லக்கா'னு சொல்லிக்கிட்டே வேகமாக நடந்தேன்.

ஞாயித்துக் கிழமைன்னா ரம்யா வீட்டில் டீ.வி. பார்க்கப் போறதைவிட, அவளைப் பார்க்கப் போறோம்கிறதே பெரிய சந்தோஷமா இருக்கும். இரண்டு பேரும் அஞ்சாங்கிளாஸ் வரை ஒண்ணா படிச்சோம். அப்புறமா நான் தீப்பெட்டி கம்பெனிக்கும் அவ ஹை ஸ்கூலுக்குமா போயிட்டோம்.



அவ வீட்டுக்குப் போனா அவ போட்டிருக்கிற டிராயிங்கெல்லாம் காட்டுவா. படிக்கிற ஸ்கூலைப் பத்தியும், கூடப் படிக்கிறவங்களைப் பத்தியும் கதை கதையாச் சொல்லுவா. கேட்கவே சிரிப்பா இருக்கும்.

ரம்யா _ எனக்கு விவரம் தெரிஞ்ச நாளிலேயிருந்து என்னோட ஃப்ரெண்டு. ஒண்ணாதான் ஸ்கூலுக்குப் போவோம். அவங்க அப்பா மளிகைக் கடை வைச்சிருக்காரு. அங்கிருந்து அப்பப்ப தினி ஏதாவது கொண்டு வருவா. நா இல்லாம

எங்கியும் போமாட்டா. ஆனா, இப்ப நானில்லாம ஹை ஸ்கூலுக்கு மட்டும் போயிட்டா.

அப்பாவுக்கு என்னைய படிக்க வைக்க நிறைய ஆசை. பாவம், அவரு என்ன பண்ணுவாரு? ஆஸ்துமா அதிகமா போனதனாலே, சீக்காளி ஆயிட்டாரு. இருபது வருஷம் தீப்பெட்டி கம்பெனியில வேலை பார்த்ததுக்கு வெறும் அஞ்சாயிரம் ரூபாயைக் கையிலே கொடுத்து அனுப்பிச்சுட்டாங்க.

"அவன் நல்லாயிருப்பானா. இத்தனை வருஷம் வெயில், பனி

வீடு ரிப்பேர் பார்க்கன்னு வாங்கிடுச்சு. மீதி சில்லறைக்கடன், மருந்து மாத்திரைன்னு தீர்ந்திடுச்சு.

அப்பாவுக்கு மாத்திரை செலவுக்கே மாசம் இருநூறு ஆகுது. எப்பவாவது அண்ணன் கொஞ்சம் பணம் தரும்.

அம்மா, வீட்டிலேயே பீடி வாங்கி லேபிள் ஒட்டுறா. தினமும் எப்படியும் நாப்பது, ஐம்பது ரூபாய்க்கு ஒட்டுவா. எனக்குத் தினக்கூலி முப்பது ரூபா. அம்மா

# பழநி




பாக்காம வேலை பார்த்த மனுசன், உடம்பு முடியல; வேலைய விட்டு நின்னுருக்காரு, ரொம்ப வேணாம், ஒரு இருபதாயிரம் கொடுத்தா என்ன? காந்திமதி கல்யாணத்துக்கு ஆகுமே'னு அம்மாதான் புலம்பித் தன்னிச்சு.

கிடைச்ச அஞ்சாயிரத்தையும் முழுசா பார்க்கல. இரண்டாயிரத்த மாமா ஏதோ

சிக்கனமா செலவு பண்ணி ஏதோ சேர்த்து வைப்பா. கனக்கா அக்கா வந்து அழுது, மூக்கு சிந்தி ஒப்பாரி வைப்பா. அம்மா அதைக் கையிலே குடுத்து அனுப்புவா. இது வழக்கமா நடக்கிறதுதான்.

"லே காந்திமதி, பார்த்து பசைய நல்லா தடவி ஒட்டுல. இன்னிக்குள்ள மூணு

## சலாம் சிநேகிதரே!

செயற்கைக்கோள் தயாரிப்பு ஆய்வுக் கூடத்தில் சுதாகரும் அவரது நண்பரும், ராக்கெட் செலுத்துவதற்கு முன்பு கவனிக்க வேண்டிய ஆயத்த வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். ஆபத்தான ரசாயனங்களைக் கலந்து எரிபொருள் தயாரித்து ரிமோட் இயக்கத்தில் அழுத்தம் ஊட்டிக் கொண்டிருந்தார்கள். பிறகு, சுதாகரும் அவரது நண்பரும் 'பேலோட்' அறைக்குச் சென்று, கலவை சரியாக நிரம்பி இருக்கிறதா என்று நோட்டம் பார்த்தார்கள். கொஞ்சமும் எதிர்பாராத விதத்தில், சுதாகரின் நெற்றியிலிருந்து ஒரு சொட்டு வியர்வை சோடியம் கலவையில் சிந்தியது. என்ன நடந்தது என்று நினைத்துப் பார்பதற்குள் பயங்கரமான வெடிச்சத்தம். அந்த அறையே குலுங்கியது. அடுத்த விநாடி அறைக்கு தீ பரவியது. சோடியத்தில் பற்றிய தீயைத் தண்ணீரால் அணைக்க முடியாது. அந்த இக்கட்டான தருணத்தில் சுதாகர், சட்டென்று சுதாரித்துக் கொண்டு, கண்ணாடி ஜன்னலை தனது கையாலேயே உடைத்து நொறுக்கி தமது நண்பரை அலக்காகத் தூக்கி வெளியே வீசினார். பிறகு அவரும் குதித்து உயிர் தப்பினார். சுதாகர் மட்டும் முன்யோசனையுடன் செயல்படாமல் இருந்திருந்தால் இருவருமே உயிர் பிழைத்திருக்க முடியாது. நமக்கு பாரத ரத்னா அப்துல்கலாமும் கிடைத்திருக்க மாட்டார்!

— இ.ரா. சக்கரபாணி

லோடு சரக்குப் போகணும். ஆமா, ஞாபகம் வைச்சுக்க" கணக்குப் பிள்ளையின் சப்தம் கேட்டு வேகமா ஓட்ட ஆரம்பிச்சேன்.

நான் மட்டும் கொஞ்சம் படிச்சிருந்தா டவுனுக்குப் போயி வேலை பார்த்து அம்மா அப்பாவ நல்லா பாத்துக்க முடியும். என் படிப்பை நிறுத்துனப்போ கூட அப்பாவுக்கு மனசே இல்லை.

"அவந்தான் தறுதலையா படிக்காம போயிட்டான். இவ நல்லா படிக்கிறா. இவளைப் படிக்க வைக்க முடியாம அந்த ஆண்டவன் எனக்கு வியாதிய கொடுத்திட்டானே"னு புலம்புவாரு.

வீட்டுக்குள்ளே நுழையும் போதே, கொல்லைப்பக்கம், அண்ணன் தலை தெரிஞ்சது.

'ஐ! பாசி மணி கேட்டமே. வாங்கிட்டு வந்திருக்குமோ?' ஆசையோடு ஓடினேன்.

"அண்ணே! நான் பாசி கேட்டேனே, வாங்கியாந்தியா?"

"அடடே, மறந்திட்டேனே. அடுத்த தடவை வாங்கியாறேன்.

"ந்தா, அங்கிட்டு போ. முக்கியமா ஏதாவது பேசிட்டு இருக்கையில குறுக்க வந்து..."னு அம்மா அதட்டினாள்.

அண்ணன் கிளம்பினான்.

"ய்யா, கணேசா, அடுத்த வாட்டி வரயில புள்ளங்களையும் அமுதாவையும் கூட்டி யாயா. பாத்து நாளாச்சு!"

"ஆகட்டும், அப்பா நா வர்றேன், போயிட்டு வாயா. புள்ளங்கள நல்லா பாத்துக்க" _ அப்பா முனகிச்சு.

எந்த விசயமாயிருந்தாலும் நான் கோமு அக்காக்கிட்டதா சொல்லுவேன். நாங்க ஸ்கூல்ல படிக்கிறப்ப ஒரு வாட்டி திருநவேலி போனது. அவ்வளவுதான். அண்ணன் அங்க இருக்குன்னுதான் பேரு, ஒரு நாள் கூட கூட்டிட்டுப் போனதில்ல. நானும் கோமு அக்காவும் கடைக்குப் போனா அவளுக்குத் தீனி வாங்க கொடுத்த துட்டையும் எனக்கே வாங்கிக் கொடுத்திடுவா. எம்போர்ல உசரா இருப்பா, இப்ப குடிகாரனுக்கு வாக்கப்பட்டு ரொம்ப கஷ்டப்படறா.

போனவாரம், அவ குழந்தையோட வந்திருந்தா, இளைச்சிப் போயி, கறுத்திட்டா. அவ மாப்பிள்ளைக்கு ஏதோ பெரிய கம்பெனியில வாட்ச்மேன் உத்தியோகம் கிடைச்சிருக்காம். அதுக்கு டெபாஸிட்

ஆயிரம் ரூபாய் கட்டறதுக்கு, அம்மாக்கிட்ட துட்டு கேட்டா, அவங்க எங்கே போவாக? கைல இருந்த இருநூறு பணத்தை மட்டும் கொடுத்தனுப்பி வச்சாங்க.

போன தடவை அண்ணன் வந்தபோது கோமுவுக்குப் பணம் தேவைப்படுதுனு கேட்டதுக்கு "ஆமா, அந்தாளுக்கு வேறே பொழப்பு இல்லை. ஒரு இடத்தில் நிரந்தரமா சோலிப் பாக்க கூறு இல்ல"னு குதிச்சான்.

'அதில்லையா. பாவம் கோமு கஷ்டப் படறா. அவள நெனச்சா வேதனையா இருக்கு'னு அம்மா அழுதாள்.

"இங்க பாருமா, இந்த மாதிரி அழுதா இனிமே நான் இங்க வரமாட்டேன். ஆமா!"னு அண்ணன் முறைக்கவும் "ஐயா, பணம் தராட்டி போகுது, இங்க வராம இருந்திடாதயா"னு கெஞ்சினாள். எனக்கும் அழுகையா வந்துச்சு.

அப்பாவுக்குத் திடீர்னு உடம்பு முடியலை. அவசரமா டவுன் ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போனோம். செலவு செய்ய முடியலை. தர்மாஸ்பத்திரிக்குக் கொண்டு போனவுடனே உயிர் போயிடுச்சு.

அண்ணன் எதையும் கண்டுக்கவே இல்லை. எங்கே பணம் கேட்டுடுவோமோனு பயம் அவனுக்கு. இன்னியோட மூணு மாசமாயிடிச்சு அப்பா போயி. அண்ணன் மாச காரியத்துக்கு வந்ததோடு சரி. அம்மா ரகசியமா அழுவுறா. அது செத்த அப்பாவுக் காகவா.. வராத அண்ணனுக்காகவா தெரியலை.

அம்மாவுக்கும் இப்பவெல்லாம் முடியல. மூச்சு விட சிரமப்படுது. அதனாலே நானே எழுந்து எல்லா வேலையும் முடிச்சுட்டு சுருக்க கிளம்பிடறேன்.

'அம்மாவை நல்லா பார்த்துக்கணும். அக்கா வரும்போதெல்லாம் காசு கொடுத்து சந்தோஷமா அனுப்பணும்.' இப்ப, இதுதான் என் லட்சியம்.

"ஏ, காந்திமதி. கிளம்பிட்டியா? சீக்கிரம் வா நேரமாயிடுச்சு"_ சங்கரியக்கா

"இதோ வர்றேன்"னு வெளியே ஓடினேன்.

ஒன்னு சொல்ல மறந்துட்டேனே... இப்ப வெல்லாம் அம்மா என்னை எழுப்பறதில்லே. நானே எழுந்திடறேன். இன்னும் கொஞ்ச நேரம் தூங்கணும்னு ஆசைப்படறதும் இல்லை. சோலி இருக்குல்லே...○



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2002 - முடிவுகள்

### பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதைகள்

அருள்வாய் நெஞ்சே – *ஜெ. ரமேஷ்பாபு*

வீரலட்சுமி – *வே. குருநாதன்*

ஒன்பது கிலோ மீட்டர்களும் நிலையற்ற மனசும் – *லாவண்யா*

உல்லாஸ்நகர் – *சிம்ப்ருக் சின்னது*

வேர்கள் – *சிவகுமார் முத்தய்யா*

அம்மா தபசு – *அஸ்வின்*

அங்கீகாரம் – *அனுஷா*

குலாபி – *ஜாஜ் வல்யா*

பாச நெருப்பூ – *சங்கையா பொன்னம்மாள்*

நெஞ்சம் உண்டு – *யோகி*

மாங்கல்ய தாரணம் – *எஸ். ஸ்ரீதுரை*

இனித்தான் எழுந்திராய் – *சிம்ப்ருக் சின்னது*

ஜகத் – *சியாமளா நாராயணன்*

வேண்டியதும் வேண்டாததும் – *சா. வள்ளி*

பிரம்ம ரகசியம் – *க. ஒப்பிலி அப்பன்*

சும்மா இருக்க மாட்டீங்களா? – *கே. ராமச்சந்திரன்*

# சிவகாமியின் சபதம்



## ஐம்பத்து ஒன்றாம் அத்தியாயம்

## சக்கரவர்த்தி தூதன்

சிமார சக்கரவர்த்தி சபையில் கூடியிருந்தவர்களை ஒரு தடவை கண்ணோட்டமாகப் பார்த்துவிட்டு, ''உங்கள் அபிப்பிராயம் என்ன? எல்லோருக்கும் சம்மதம்தானே?'' என்று கேட்டார்.

சபையில் எல்லாருடைய முகத்திலும் திகைப்பின் அறிகுறி காணப்பட்டது. சற்று நேரம் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

உண்மையென்னவென்றால், அங்கே கூடியிருந்தவர்கள் யாவரும் யுத்தம் சம்பந்தமாக அபிப்பிராயம் கூறுவதற்காக வரவில்லை. மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பத்தையும் ஆக்ஞையையும் தெரிந்து கொள்வதற்காகவே அவர்கள் வந்திருந்தார்கள்.

ஒன்பது மாதத்துக்கு முன்னால் சக்கரவர்த்தி வடக்குப் போர்க்களம் சென்றபோது, அவர்கள் மேற்படி கொள்கையையே அனுஷ்டித்துச் சக்கரவர்த்திக்குச் சர்வாதிகாரம் அளித்தார்கள். இப்போதும் அதே உறுதியுடன்தான் சபையில் கூடியிருந்தார்கள்.

விஷயம் இப்படியிருக்க, மாமல்லர் திடீரென்று எதிர்பாராத விதமாக ஒரு பெரிய அபாயகரமான காரியத்தைச் செய்யப் போவதாகச் சொல்லி, அதைப் பற்றி அபிப்பிராயமும் கேட்கவே, எல்லாரும் மனக் குழப்பத்தில் ஆழ்ந்து, இன்னது செய்வதென்று தெரியாமல் சும்மா இருக்கும்படி நேர்ந்தது.

**அமரர் கல்கி**

மாமல்லர் எல்லோருடைய முகங்களையும் ஒருதடவை கண்ணோட்டம் செலுத்திப் பார்த்துவிட்டு, "ஏன் எல்லாரும் மறுமொழி சொல்லாமலிருக்கிறீர்கள்? இது என்ன மௌனம்? உங்கள் முன்னிலையில் சொல்லத் தகாத வார்த்தைகள் ஏதேனும் சொல்லிவிட்டேனா? வீர பல்லவ குலத்துக்கு இழுக்குத் தரும் காரியம் எதையேனும் கூறினேனா?" என்று கம்பீரமாகக் கேட்டார்.

இன்னமும் அச் சபையில் மௌனம் தான் குடிகொண்டிருந்தது. பெரியதொரு தர்மசங்கடத்தில் தாங்கள் அகப்பட்டுக் கொண்டிருப்பதாக ஒவ்வொருவரும் உணர்ந்து, வாய் திறவாமல் இருந்தார்கள்.

"நல்லது, உங்களில் ஒருவரும் ஆட்சேபியாதபடியினால், என்னுடைய யோசனையை ஒப்புக்கொள்கிறீர்கள் என்று ஏற்படுகிறது. சேனாதிபதி! அப்படித்தானே?" என்று மாமல்லர் சேனாதிபதி கலிப்பகையாரைக் குறிப்பாகப் பார்த்துக் கேட்டார்.

சேனாதிபதி கலிப்பகையார் எழுந்து, "குமார சக்கரவர்த்தியின் கட்டளை எதுவோ, அதன்படி நடக்க நான் கடமைப்பட்டவன். ஆனால், அது யுக்தமானது என்று என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. மாமல்லர் கூறுவது சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறானது. எவ்வளவோ தீர்க்காலோசனையின் பேரில் பல்லவேந்திரர் நமது சைனியத்தைக் கோட்டைக்குள்ளே கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். மகேந்திர சக்கரவர்த்தி கோழை அல்ல; போருக்குப் பயந்தவர் அல்ல. சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறாக நாம் எதுவும் செய்வது உசிதமல்ல" என்றார்.

குமார சக்கரவர்த்தியின் முகத்தில் ஆத்திரம் கொதித்தது.

"சேனாதிபதி! என்னுடைய வீரத் தந்தையைக் கோழை என்றோ பயந்தவர் என்றோ நான் சொன்னேனா? அதைக் காட்டிலும் என் நாவை அறுத்துக்கொள்வேன்! என் தந்தையின் யுத்த தந்திரம் வேறு; என்னுடைய யுத்த தந்திரம் வேறு. அவர் இல்லாதபோது என்னுடைய யுத்த தந்திரத்தை அனுசரிக்க எனக்குப் பாத்தியதை உண்டு. சேனாதிபதி! பல்லவ சைனியம் நாளைச் சூரியோதயத்திற்குள் யுத்த சந்நத்தமாகக் கிளம்ப ஆயத்தம் செய்யுங்கள்!"

சேனாதிபதி கலிப்பகையார், சற்றுத் தணிந்த குரலில், "பல்லவ குமாரரின் தந்திரம் யுத்த தந்திரம் அல்ல; தற்கொலைத் தந்திரம்! வாதாபி சைனியத்தில் ஐந்து லட்சம் போர் வீரர்கள் இருக்கிறார்கள்; பல்லவ வீரர்கள் லட்சம் பேருக்கு மேல் இல்லை" என்றார்.

மாமல்லர் கண்களில் தீப்பொறி பறக்க விழித்துக் கூறினார்: "சேனாதிபதி! புள்ளலூர்ப் போர்க்களத்தில் பல்லவ வீரர் எத்தனை பேர், கங்கபாடி வீரர் எத்தனை பேர் என்பதை அறிவீரா? ஐம்பதினாயிரம் கங்க வீரர்களைப் புறங்காட்டி ஓடும்படி நமது பதினாயிரம் வீரர்கள் செய்யவில்லையா? போர்க்களத்தில் ஆட்களின் கணக்கா பெரிது? வெற்றியளிப்பது வீரமல்லவா? பல்லவ வீரன் ஒவ்வொருவனும் சளுக்க வீரர் ஒன்பது பேருக்கு ஈடானவன். கலிப்பகையாரே! இதைத் தாங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லையா?"

"வாதாபி சைனியத்தில் ஐந்து லட்சம் வீரர்கள் மட்டுமில்லை; பதினையாயிரம் போர் யானைகள் இருக்கின்றன!" என்றார் கலிப்பகையார்.

"இருந்தால் என்ன? நமது வீரத் தளபதி பரஞ்சோதியாரின் கைவேலுக்கு அஞ்சி, மதம் பிடித்த யானை


''பல்லவ குமாரரின் தந்திரம் யுத்த தந்திரம் அல்ல; தற்கொலைத் தந்திரம்! வாதாபி சைனியத்தில் ஐந்து லட்சம் போர் வீரர்கள் இருக்கிறார்கள்; பல்லவ வீரர்கள் லட்சம் பேருக்கு மேல் இல்லை''


இந்தக் காஞ்சி நகரின் வீதிகளில் தெறி
கெட்டு ஓடியது நமது சேனாதிபதிக்குத்
தெரியாது போலிருக்கிறது. தளபதி
பரஞ்சோதியைப் போன்ற ஒரு
லட்சம் வீர சிம்மங்கள்

பல்லவ சைனியத்தில் இருக்கும்போது, புலிகேசியின் போர் யானைக்கு நாம் ஏன் அஞ்ச வேண்டும்...?

விவாதம் இவ்விதம் முற்றிக் கொண்டிருப்பதைக் கண்ட முதல் மந்திரி சாரங்க தேவர் பெரிதும் கவலையடைந்தார். பெரியவர் எழுந்து நின்றதும் மாமல்லர் பேச்சை நிறுத்தினார்.

"ஒரு விஷயம் நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். சக்கரவர்த்தி இன்னமும் வந்து சேர அவகாசம் இருக்கிறதல்லவா? இந்த விஷயம் கோட்டை வாசற்காவலர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறதா? சக்கரவர்த்தி இன்றிரவு ஒருவேளை வந்தால், கோட்டைக் கதவைத் தாமதமின்றித் திறந்து விடக் காவலர்கள் ஆயத்தமாக இருக்கிறார்களா?" என்று முதன்மந்திரி வினவினார்.

அப்போது தளபதி பரஞ்சோதி, "ஆம், அப்படித்தான் கட்டளையிட்டிருக்கிறேன். சக்கரவர்த்திப் பெருமான் ஒருவேளை தூதர்கள் மூலமாகச் செய்தி அனுப்பக்கூடுமென்று எதிர்பார்த்து, அதற்கும் தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்றார்.

தளபதி பரஞ்சோதி இவ்விதம் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே, மண்டபத்தின் வாசற் காவலன் ஒருவன் விரைந்து உள்ளே வந்து, "சக்கரவர்த்தியிடமிருந்து தூதன் ஓலை கொண்டு வந்திருக்கிறான். சிங்க இலச்சினையுடன் வந்திருக்கிறான்!" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்ட மாமல்லர் திகைத்துப் போய் நின்றார். சபையில் இருந்த மற்றவர்கள் எல்லாரும், மிகவும் நெருக்கடியான சமயத்தில், தெய்வமே தங்களுடைய துணைக்கு வந்தது என்று எண்ணியவர்களாய், மனத்திற்குள் உற்சாகமடைந்தார்கள்.

## ஐம்பத்து இரண்டாம் அத்தியாயம்

## பயங்கரச் செய்தி

சக்கரவர்த்தியின் தூதன் சபாமண்டபத்துக்குள்ளே பிரவேசித்தபோது, சபையில் நிசப்தம் நிலவியது.

வந்தவன் நெடிதுயர்ந்த ஆஜானுபாகுவான தோற்றமளித்தான். போர்க்களத்திலிருந்து நேரடியாக வந்தவனாகக் காணப்பட்டான். அவனது தலையிலும் முகத்திலும் காயங்களுக்குக் கட்டுக்கள் போடப்பட்டிருந்தன. அவன் உடுத்தியிருந்த துணிகள் இரத்தக் கறையினால் சிவந்திருந்தன.

என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறானோ என்ற ஆவலானது, எல்லோருடைய மனத்திலும் குடிகொண்டு, வேறு வகை எண்ணங்களுக்கே இடம் இல்லாமல் செய்தது. சபையிலிருந்த அத்தனை பேரின் கண்களும் இமை கொட்டாமல் அத் தூதனை நோக்கின.

அப்படிப் பார்த்தவர்களில் தளபதி பரஞ்சோதியும் ஒருவர் என்று சொல்ல வேண்டியதில்லை. மற்றவர்களுடைய மனத்தில் குடிகொண்டிருந்த ஆவல், அவருடைய மனத்திலும் இருந்ததாயினும் அதோடு இன்னொரு வியப்பும் அவர் மனத்தில் ஊசலாடியது. அது இத் தூதனை எங்கேயோ பார்த்திருக்கிறோம் என்ற உணர்ச்சிதான்.

தூதன், சபையில் உள்ளவர்களையெல்லாம் ஒருதடவை சுற்றி வளைத்துப் பார்த்தான். கடைசியில் அவனுடைய கண்கள் குமார சக்கரவர்த்தியின் முகத்திற்கு வந்து, அங்கேயே ஸ்திரமாக நின்றன.

"பல்லவ குமாரா! தங்கள் தந்தையிடமிருந்து மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். செய்தியை இந்தச் சபையிலேயே சொல்லலாமல்லவா?" என்று கேட்டான்.

மாமல்லர் முதன்மந்திரியின் முகத்தைப் பார்த்தார். அந்தக் குறிப்பையறிந்த சாரங்க தேவபட்டர், "சக்கரவர்த்தியின் செய்தியை இங்கேயுள்ளவர்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டியதுதான்! இங்கேயே தாராளமாகச் சொல்லலாம்" என்றார்.

"அப்படியானால் கேளுங்கள், நான் கொண்டு வந்திருக்கும் செய்தி மிகப் பயங்கரமானது. ஆயினும் சொல்லியே தீர வேண்டும்... பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி சிறைப்பட்டார்...!"

களங்கமற்ற ஆகாசத்திலிருந்து திடீரென்று பேரிடி விழுந்தது போலிருந்தது. அந்தச் சபையிலிருந்தவர்கள் அனைவருக்கும். சிலர் "என்ன? என்ன?" என்று அலறினார்கள். சிலர் ஆசனத்திலிருந்து குதித்து எழுந்தார்கள். சிலர் திறந்த வாய் மூடாமல் திகைத்த பார்வையுடன் தூதவனைப் பார்த்த வண்ணமிருந்தார்கள்.

மாமல்லர் பயங்கரமான ஒரு சிரிப்புச் சிரித்தார். அது சபையிலிருந்த அனைவருக்கும் மயிர்க் கூச்சை உண்டாக்கிற்று.

"சக்கரவர்த்தி சிறைப்பட்டாரா? எப்படி? எப்போது? யார் சிறைப்படுத்தினார்கள்?" என்று மாமல்லர் கர்ஜித்தார். அவருடைய கரம் தன்னையறியாமல் உடைவாளை உருவியது.

"வாதாபி சைனியத்தின் முன்னணிப் படையினால் சக்கரவர்த்தி சிறைப்படுத்தப்பட்டார். நேற்று மாலையிலேதான்! தெற்கேயிருந்து திரும்பியவர், வாதாபி சைனியத்தின் நிலையை அறிந்து கொள்ளுவதற்காக நேரே வடதிசை சென்றார். போன இடத்தில் எதிர்பாராதவிதமாக வாதாபி வீரர்களால் சிறைப்படுத்தப்பட்டார். பல்லவ குமாரா! சக்கரவர்த்தி என்னிடம் தங்களுக்குச் சொல்லியனுப்பிய செய்தி இதுதான்: 'என் மகன் தன்னுடைய இணையில்லா வீரத்தைக் காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது; வாதாபி சைனியத்தை முறியடித்துப் புலிகேசியைக் கர்வபங்கம் செய்து, என்னை விடுதலை செய்ய வேண்டிய பொறுப்பு, என் வீரப் புதல்வனைச் சேர்ந்தது! மாமல்லனுக்கு இது அசாத்தியமான காரியமல்ல!' - இந்தச் செய்தியைத்தான் தங்கள் தந்தையிடமிருந்து கொண்டு வந்தேன்" என்று கூறி நிறுத்தினான் தூதன்.

**மா**மல்லர் அப்போது சபையிலிருந்தவர்கள் அனைவரையும் ஒரு தடவை கண்களில் அக்னி ஜுவாலை எழும்படி பார்த்துவிட்டு, "சேனாதிபதி! இப்போதாவது நமது படைகளைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போகச் சம்மதிப்பீரா? மந்திரிகளும் அமைச்சர்களும் என்ன சொல்கிறீர்கள்? கோட்டத் தலைவர்களின் அபிப்பிராயம் என்ன?" என்று இடி முழக்கம் போன்ற குரலில் கேட்டுவிட்டு, தமக்குப் பின்னால் நின்ற தளபதி பரஞ்சோதியைத் திரும்பிப் பார்த்து, "தளபதி! நீர்கூட ஏன் இப்படி ஸ்தம்பித்து நிற்கிறீர்? எல்லாரும் அசையாத ஜடப்பொருள்கள் ஆகி விட்டீர்களா?" என்றார்.

அப்போது முதல் அமைச்சர் எழுந்து, "இந்தத் தூதன் சொல்வது உண்மை என்பதற்கு என்ன ஆதாரம்?" என்று வினவினார்.

தூதன் உடனே கையிலிருந்த சிங்க

இலச்சினையைக் காட்டி, "இதுதான் ஆதாரம்; என் முகத்திலும் உடம்பிலும் உள்ள காயங்கள்தான் அத்தாட்சி!" என்றான்.

"ஆஹா! மகேந்திர சக்கரவர்த்தி பகைவர்களின் கையில் சிக்கிக் கொண்டிருக்கிறார். நீங்கள் ஆதாரம் கேட்டுக் கொண்டு காலங் கடத்துகிறீர்கள் அல்லவா! தளபதி! வாரும், நாம் போகலாம்!" என்று மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்.

ஆனால், தளபதி பரஞ்சோதி ஏதோ ஒரு மனக் குழப்பத்தில் ஆழ்ந்தவராய்க் காயக் கட்டுக்களுடன் நெடிதுயர்ந்த நின்ற தூதனின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

முதன் மந்திரி சாரங்கதேவபட்டர், "இந்தத் தூதனை இதற்கு முன்னால் நம்மில் யாராவது பார்த்ததுண்டா? தூதா! நீ யார்?" என்று கேட்க, தூதன் கூறினான்:

"நான் யாரா? பல்லவ சக்கரவர்த்தியின் அந்தரங்க ஒற்றன். பல்லவ ஒற்றர் படையில் சத்ருக்னருக்கு அடுத்த பதவி வகிப்பவன். தளபதி பரஞ்சோதி என்னை அடிக்கடி பார்த்திருக்கிறார்! தளபதி! என்னைத் தெரியவில்லையா? இந்தக் காஞ்சி நகருக்கு உம்மை அழைத்து வந்த நாகநந்தி நான்தான் என்று தெரியவில்லையா? ஆயனரும் அவர் மகளும் தெரிந்தோ தெரியாமலோ வாதாபி அரசனுக்கு ஒற்று வேலை செய்வதாகச் சந்தேகித்துச் சக்கரவர்த்தி என்னை அவர்களுக்குக் காவலாகப் போட்டார். ஆயனர் புலிகேசிக்குக் கொடுத்த இரகசிய ஓலையை எடுத்துக் கொண்டு, நாகார்ஜுன மலைக்கு நீர் கிளம்பிச் சென்றீர். சக்கரவர்த்தி அதை நான் தெரியப்படுத்தியதன் பேரில், அந்த ஓலையைச் சக்கரவர்த்தி உம்மிடமிருந்து பறித்துக்கொண்டார். தளபதி! இதெல்லாம் உண்மையா, இல்லையா?" என்று தூதன் கம்பீரமாகக் கேட்டான்.

தளபதி பரஞ்சோதியின் தலை சுழன்றது. சிற்சில விஷயங்களை எண்ணிப் பார்க்கும்போது, ஒருவேளை அத் தூதன் கூறியது உண்மையாயிருக்கலாமென்று தோன்றியது.

தூதன் மேலும் சொன்னான்: "ஆயனருடன் குண்டோதரன் என்ற பெயருடன் வாதாபி ஒற்றன் ஒருவன் இருந்து வந்தான். அவன் நேற்று ஆயனருடைய செய்தியுடன் வாதாபி சைனியத்தைச் சந்திப்பதற்காகச் சென்றான். அவனைத் தடுப்பதற்காகச் சக்கரவர்த்தியும் நானும் தொடர்ந்து போனபோது, எதிர்பாராத விதமாகச் சளுக்க வீரர்கள் எங்களைச் சூழ்ந்துகொண்டார்கள். கடவுள் அருளால் நான் தப்பி வந்தேன். அவ்வளவுதான் விஷயம்; சக்கரவர்த்தி இன்னும் சில பணிகளை எனக்கு இட்டிருக்கிறார்கள். அவற்றை நிறைவேற்றுவதற்கு நான் சத்ருக்னரைத் தேடிப் போக வேண்டும். விடை கொடுங்கள்! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். நன்கு ஆலோசித்து எது உசிதமோ அவ்விதம் செய்யுங்கள்!"

இவ்வாறு கூறிவிட்டு, தூதன் சபா மண்டபத்தை விட்டு வெளியே சென்றான். மேலும் அவனை ஏதேனும் கேட்கவோ, அவனைத் தடுத்து நிறுத்தவோ, யாருக்கும் தோன்றவில்லை.

சபையிலிருந்த அனைவரும் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்.

மாமல்லரின் நெஞ்சில் ஆயிரந் தேள்கள் கொட்டிக்கொண்டிருந்தன. ஆகா! ஆயனரும் அவர் மகளும் வாதாபிக்கு ஒற்று வேலை செய்கிறார்களா? அப்படிப்பட்டவர்களையா நாம் வெள்ளத்திலிருந்து காப்பாற்றினோம்? அந்தச் சிவகாமியிடமா நாம் எல்லையில்லாக் காதல் வைத்தோம்? அவர்களாலேயா இப்பொழுது மகேந்திர பல்லவர் பகைவர்களிடம் சிறைப்பட்டிருக்கிறார்...?

அந்தச் சபையில் இருந்தவர்களில் அப்போது மாமல்லரின் மன வேதனையை அறிந்து கொள்ளக்கூடிய தளபதி பரஞ்சோதி ஒருவர்தான் இருந்தார். அவர் மாமல்லரின் கரத்தைப் பற்றிக் கொண்டு, "இன்னும் என்ன யோசனை! வாருங்கள், போர்க்களத்துக்குப் புறப்படலாம்! அந்த வாதாபி ராட்சதர்களை முறியடித்து நிர்மூலம் செய்துவிட்டுச் சக்கரவர்த்தியை

# அருள்வாக்கு

ஈடுபாடு, சிரத்தை இந்த இரண்டும் இரண்டு நேத்ரங்கள் மாதிரி. சிரத்தை என்றால் ரொம்பவும் அக்கறையாக, கவனமாகச் செய்வது என்று பொதுவில் அர்த்தம் செய்து கொள்கிறோம். கவனக் குறைவாக இருந்தால், 'அசிரத்தையாயிருக்கிறான்' என்கிறோம். சிரத்தை என்றால் நம்பிக்கை. Faith என்று முக்யமான அர்த்தம். புத்திபூர்வமாக நிரூபிக்கக் கூடியவற்றிலும் பிரத்யக்ஷமாகப் பலனைத் தருவதிலும் 'நம்பிக்கை' என்ற ஒன்றுக்கு இடமில்லை. இவற்றின் கீழ் வராத அதிருஷ்ட, ஆத்மார்த்த விஷயங்களில் பெரியோர்கள் - மெய்ப்பொருளைக் கண்டுணர்ந்த முன்னோர்கள் - ஏற்படுத்திக் கொடுத்திருக்கிற ஆசார, அநுஷ்டானங்களில் நம்பிக்கை ரொம்பவும் அவசியம். பகவான் (கீதையில்) 'ச்ரத்தாவான் லபதே ஞானம்' - சிரத்தையுள்ளவன்தான் ஆத்மாவைப் பற்றிய அறிவு பெறுகிறான் - என்கிறார். 'ச்ராத்தம்' (ச்ரார்த்தம் என்று தப்பாக 'ர்' போட்டுச் சொல்கிறார்களே, அது) என்றாலே ச்ரத்தையோடு செய்யப்படுவது என்றுதான் அர்த்தம். காரணம் கேட்காமல், நம்பிச் செய்ய வேண்டும். ஸயன்ஸ்படி ஸரியாய் வருகிறது. மனோதத்துவத்துக்கு ஏற்றதாயிருக்கிறது. ஆரோக்யத்துக்கு உகந்ததாயிருக்கிறது என்றெல்லாம் காரணம் பார்த்துக்கொண்டு ஆசாரங்களை ஏற்பது என்றால், அநேக ஆசாரங்களுக்கு இன்று நாமுள்ள அறிவு வளர்ச்சி நிலையில் இப்படிப்பட்ட காரணங்களைக் காட்ட முடியாமலும் இருக்கும். அதனால் அவற்றைத் தள்ளி விடுவது என்றால் ஒரே அநாசாரத்தில்தான் முடியும். சிலதைப் பண்ணுவது, சிலதை விடுவது என்பது பாதிக் கிணறு தாண்டுகிற கதைதான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

மீட்டுக் கொண்டு வரலாம்! மாமல்லரே! புள்ளலூர்ச் சண்டையை நினைவு கூருங்கள்!" என்றார்.

இதைக் கேட்ட சேனாதிபதி கலிப்பகையாரும் பிரமையிலிருந்து விடுபட்டவராய், "ஆம், தளபதி கூறுவது நியாயந்தான். இனி யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை. படைகள் புறப்பட உடனே கட்டளையிடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு எழுந்தார்.

சபையிலிருந்த அத்தனை பேரும் ஏக காலத்தில் எழுந்து நின்று, "மகேந்திர பல்லவர் வாழ்க!" "அரக்கன் புலிகேசி அழிக!" என்று பல வகையான வீரகோஷங்களைச் செய்தார்கள்.



ந்த கோஷங்களுக்கிடையில் சபாமண்டபத்தின் வாசலிலும் ஏதோ குழப்பமான சப்தங்கள் எழுந்தன. குதிரையின் காலடிச் சப்தம், வேல்களும் வாள்களும் உராயும் சப்தம், அதிகாரக் குரலில் யாரோ கட்டளையிடும் சப்தம், தடதட வென்று பலர் ஓடுகிற சப்தம் - இவை எல்லாம் கலந்து வந்தன.

ஆம்; அச் சமயத்தில் சபா மண்டபத்தின் வாசலில் ஒரு முக்கியமான சம்பவம் நடந்துகொண்டுதானிருந்தது. சக்கரவர்த்தி சிறைப்பட்ட செய்தியைக் கொண்டு வந்த தூதன் மண்டபத்தின் வாசலுக்கு வந்தபோது, அவ்விடம் குதிரை மீது ஆரோகணித்தவராய்ச் சாக்ஷாத் மகேந்திர பல்லவரே வந்து சேர்ந்தார். மண்டபத்தின் வாசலில் காவல் செய்த வீரர்களைப் பார்த்து, அந்தத் தூதனைப் பிடித்துச் சிறைப் படுத்தும்படி சக்கரவர்த்தி கட்டளையிட, வீரர்கள் அக்கணமே அவனை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டார்கள்!

(தொடரும்)



## மஹாலக்ஷ்மி முதியோர் இல்லம்

பிராமணர்களுக்கு மட்டும்

கனிவான சேவை, உயர்தர உணவு, ரூமுக்கு ரூம் channel music, காற்றோட்டமான இடம், மற்றும் மருத்துவ வசதியுடன் கூடிய இல்லத்தில் சேர வரவேற்கப்படுகிறார்கள்.

விடுமுறையில் வெளியூர் செல்பவர்கள் தங்கள் வயதான பெற்றோர்கள், உறவினர்களை இங்கு விட்டுச் செல்லலாம்.

**மஹாலக்ஷ்மி முதியோர் இல்லம்**

(தனி T.V. மற்றும் A/c வசதி உண்டு)

Only for Brahmins

No.14, 24th Street, (Near water Tank)

நங்கநல்லூர் சென்னை - 600 061.

Ph: 2311047, 2346986

Cell: 98410 - 35836

**மாதாந்திர திருக்கோயில் தரிசனம் நடைபெறுகிறது**

---

**நியூமராலஜி**



## வாழ்க்கையில் வெற்றி பெறுங்கள்

கடன், நோய், கல்வியில் தடை, தொழில் மந்தம், குடும்ப அமைதியின்மை, திருமணத்தடை, குழந்தை பாக்யம் இல்லாமை, வேலை வாய்ப்பின்மை, வழக்குகள், திறமையிருந்தும் பயன்படாமை, இதுபோன்ற பல பிரச்னைகளை "நியூமராலஜி, பெயரியல், எழுத்தொலி முறை" மூலம் தங்கள் பெயரில் சிறு மாற்றம் செய்து, அதிர்ஷ்டப் பெயராக மாற்றியமைத்து, அமோக வாழ்க்கை வாழுங்கள். எளிய கட்டணம் ரூ. 275/- **M.O.** செய்யவும்.

தங்களின் பெயர், பிறந்த தேதி, பிறந்த நேரம், பிறந்த ஊர், பெற்றோர் பெயர், இஷ்ட தெய்வப் பெயர், முகவரியுடன் அனுப்பவும்.

பிறந்த குழந்தைகள், வியாபார ஸ்தலம், வீடு வாகனம் பெயர்கள் அமைத்து தரப்படும்.

பதில் தபாலில் அனுப்பப்படும். நேரிலும் சந்திக்கலாம்.

போன்: 04369 - 251604

**D. KRISHHNAMURTHY. B.Com,** (Numerologist)
73, Thethakudi South (Po) (Near Ambal School)
Vedaranyam (Tk) Nagapattinam (Dt)PIN - 614 809

**வெற்றி உறுதி**

---

**பெண்கள் மட்டும் படிக்கவும்**

# சுத்தம் – சுகம் – ஆரோக்கியம்




**Clenshe** gel®

பெண்களுக்கு மட்டுமே ஏற்படக் கூடிய சில உபாதைகள் உண்டு. உடலில் சில இடங்களில் தனிப்பட்ட சுத்தம், சுகாதாரம் ஆகியவற்றில் அக்கறை காட்ட வேண்டியது மிகவும் அவசியம்.

உடலின் அந்தரங்கமான பகுதிகளை மென்மையாகவும் பாதுகாப்பாகவும் சுத்தம் செய்வதற்காகவே விசேஷமாகத் தயாரிக்கப்பட்டது – கிளென்ஷீ ஜெல். முற்றிலும் மூலிகைகளால் தயாரிக்கப்பட்டது. பக்க விளைவுகள் எதுவும் இல்லாதது.

அழுக்கு, துர்நாற்றம் ஆகியவற்றை அறவே நீக்கிவிடும் கிளென்ஷீ. சானிட்டரி நாப்கின்களை மாற்றும்போதும் இதைப் பயன்படுத்தலாம். தொடைகளுக்கு இடையே ஏற்படும் சிராய்ப்பு அல்லது புண்களுக்கு இது நல்ல மருந்து. தொடர்ந்து தினமும் இதைப் பயன்படுத்தி வந்தால், நுண்ணுயிர்களால் ஏற்படும் நோய்த் தொற்றுகளைத் தடுக்கலாம். உடலுறவு கொள்வதற்கு முன்பும் பின்பும் இதைப் பயன்படுத்துவதும் நல்லது.

சுத்தமான, குளுமையான, நம்பிக்கை தரும் நல்ல புத்துணர்ச்சியை பெற – கிளென்ஷீ ஜெல்.

சுத்தம், சுகாதாரம்

**Clenshe** gel®

**இது ஓர் ஆயுர்வேதத் தயாரிப்பு**

For trade enquiries contact:

**Nimba Aswatha Pharma**

(O)57(N)137, Kodambakkam High Road, T. Nagar, Chennai - 600 017. Ph: 8312998

*Available at all medical shops and Health & Glow*

Distributors Solicited

# 'மாட்ச் ஃபிக்ஸிங்' மாதுரி!

மும்பைக்காரர்களைப் பல 'பாபா பெங்காலி'கள் தங்கள் மந்திர தந்திரத்தால் ஆட்டுவிக்க, அதற்குப் பெரும் எதிர்ப்பு எழுந்துள்ளது. மூட நம்பிக்கை ஒழிப்பு இயக்கம் ஒன்று, குழந்தைகள் விலங்குகள் முதலானவற்றைக் காவு கொடுத்து, பேய் பிசாசு விரட்டி, அதிசயக் குழந்தைகளைப் பிறப்பித்து அற்புதங்களை நிகழ்த்தும் 'பாபா பெங்காலி'களை போலீசுக்குப் பிடித்துத் தந்தது. வாயில் சூடம் கொளுத்துவது, தீ மிதிப்பது, அந்தரத்திலிருந்து விபூதி, செயின், மோதிரம் வரவழைப்பது போன்ற 'வித்தைகள்', வித்தைகளே அல்ல என்று விஞ்ஞான பூர்வமாக மேடை போட்டு நிகழ்த்திக் காட்டியதுடன், மூட நம்பிக்கைகளை ஒழிக்க அரசியல் சாசனமே இயற்ற வேண்டும் என்று கோரிக்கை வைத்துள்ளது. இவர்கள் காட்டுக் கத்தல் கத்தி என்ன ஆகப் போகிறது? "எங்கள் முன்னே அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுங்கள்; ஐந்து லட்சம் தருகிறோம்'' என்று இவர்களது சவாலை இதுவரை யாரும் ஏற்கவுமில்லை! "எங்களுக்குக் குழந்தை வேண்டும், நிலம் வேண்டும், புதையல் வேண்டும்'' என்று கண்ட கண்ட பாபாக்களை அணுகுவோர் கூட்டம் குறையவுமில்லை, நம்பிக்கை தானே வாழ்வின் உயிர் நாடி? அதற்கு 'மூட' என்றொரு இனிஷியல் இருந்தால் என்ன என்று நினைக்கிறார்களோ?

நினைத்த நொடியில் சமாளிப்பதென்பதே பெரும் கலை! ஷத்ருகன் சின்ஹா மனைவிக்கு அது கைவந்த கலை; பரேலில் நடந்த ஒரு மருத்துவ ஆராய்ச்சி நிலைய பெயர் மாற்று விழாவில், நிகழ்ச்சி தொகுப்பாளர், "ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னும் ஒரு பெண் இருப்பாள்'' என்றார், ஷத்ருகனின் மனைவி பூனத்தைப் பார்த்துக் கொண்டே, அப்போது "அவன் தோல்விக்குப் பின்னும் ஒரு பெண்தானிருப்பாள்'' என்று ஜோக்கடித்தார் சின்ஹா. உடனே மைக்கை வாங்கி, "ஆமாமாம். மனைவி அல்லாத மற்றொரு பெண்'' என்று ஒரு போடு போட்டார் பூனம்; ஷாட்கன் சைலண்ட்டாகி விட்டார்! சாதுர்யமான பேச்சு!

சாதுர்யமாகப் பேசாமல் சாதாரணனைப் போல் கண்ணீர் விடுவதா என்று கபிலைப் பற்றி அவலை மென்ற வாய்களெல்லாம், 'கம்'மென்றாகி விட்டன; 'விஸ்டன் இண்டியன் கிரிக்கெட்டர் ஆஃப் த செஞ்சுரி' அவார்டு கிடைத்திருக்கிறதே கபிலுக்கு? மாமியார் திருமதி பாட்டியா, ''எல்லோரும் சச்சினுக்குத்தான் கிடைக்கும் என்றார்கள், அதனால்தான் கபிலும் ரோமியைக் கூட அழைத்துச் செல்ல நிர்பந்திக்கவில்லை; ஆனால் கபிலின் தாயார் ராஜேஸ்வரி தேவிதான், ''பரிசு கிடைக்கிறதோ இல்லையோ; நாமினேட் ஆகியிருப்பதால் நீயும் கூட இருப்பது தான் நல்லது'' என்று வற்புறுத்தி ரோமியைக் கூட அனுப்பினார். பரிசும் கிடைத்தது'' என்று சந்தோஷிக்கிறார். நீதி - 'மாமியார் சொல்லைத் தட்டாதே!'

• ரோமி - கபில்



மாமியார் சொல்லைத் தட்டாதிருக்கட்டும்; மாதுரி சொல்லைத் தட்டாதே என்ற புதுமொழி பிறந்துவிடும் போலிருக்கிறதே! 'கஹின் கஹி கோயி ஹை...' சோனி டீவி மூலம் ஜோடி எல்லாம் சேர்க்க ஆரம்பித்து விட்டாரே! பெண்ணையும் அவன் வீட்டாரையும்,

## மும்பை மசாலா

அவர்கள் தேர்வு செய்யும் மூன்று வரன்களுடனும் அவர்கள் பெற்றோருடனும் சின்னத் திரையில் சந்திக்க வைத்து, ஒரு முடிவுக்கு வருவதுதான் நிகழ்ச்சி! முடிவெடுக்க உதவுபவர், மாதுரி தீக்ஷித்! முதல் எபிசோடில் படு சினிமாத்தனம்! மாதுரியே மணப்பெண் போலிருப்பது வேறு கதை! என்னமோ... சினிமாக்காரர்கள் சிபாரிசு செய்யும் சோப்பு, பற்பசை, துணிமணிகள், ஸ்கூட்டர், கார்களை வாங்கிக் கொண்டிருந்தோம்; இப்போது அவர்கள் சொல்பவர்களுக்கு கழுத்தையும் நீட்ட வேண்டுமா...? ம்ம்... கழுத்தறுப்பாக இல்லாதிருந்தால் சரி!

**கமுத்**



...தறுப்பாக இல்லாதிருந்தால் சரி... கழுத்தறுபட்டிருந்தால்...? ஸ்ஹயோ... நம் இளசுகளின் இதய தெய்வம் ஹிருத்திக்கின் நிலை என்னவாகியிருக்கும்? அவர் கழுத்துக்குக் கத்தி வைத்திருந்த தாமே ஷகில் அண்டர் கோ? அண்டர் வர்ல்ட் டான் சோட்டா ஷகிலுக்கும், சஞ்சய் தத்துக்குமிடையே நடந்த டெலிஃபோன் உரையாடலை, காவல்துறை ரகசியமாக 'டேப்' செய்து இப்போது அம்பலப் படுத்தியிருக்கிறது. சஞ்சய் தத், "சிக்னா (ஹ்ருத்திக்தான்) அந்த... (ஹீரோயின்) இடம் மரியாதையில்லாம நடந்துக்கிட்டான் தெரியுமா?'' என்று வத்தி வைக்க, "கவலைப் படாதே; நல்லபடியாக நடக்க வேண்டும் என பிரார்த்தித்துக் கொள்" என்று ஷகில் பதிலிறுப்பதாக 'டேப்' சொல்கிறது! ஹூம்... எதுக்குத்தான் பிரார்த்தனை பண்ணுவது என்று விவஸ்தை இல்லையா?

**– ஜெயஸ்ரீ ராஜ்**

"ஓராண்டுக்கு முன், என் அப்பா ஒரு விபத்தில் இரண்டு கைகளையும் இழந்தார். அதனால் அவர் பார்த்து வந்த வேலையை இழக்க நேரிட்டது. எங்கள் குடும்பத்தில் நாங்கள் ஐந்து சகோதரிகள். இரண்டு பேருக்குத் திருமணமாகி விட்டது. ஒருவர் உடல் ஊனமுற்றவர். நான் என் பள்ளிப் படிப்பை விட்டுவிட்டு, குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக வேலைக்குப் போனேன். அந்தத் தொழிற்சாலையின் ரசாயனப் பொருட்கள் நிறைந்த சூழ்நிலை, என்


• பயிற்சி வகுப்பு

உடல்நலத்தைப் பாதித்தது. ஆனால், சாப்பாட்டுக்கு வேறுவழி இல்லையே!

அந்தச் சந்தர்ப்பத்தில் தான், சென்னை லேப்ஸ் அளிக்கும் பயிற்சி பற்றிக் கேள்விப்பட்டேன். அவர்கள் வைத்த டெஸ்ட்டில் தேர்ச்சி அடைந்து டி.டி.பி. என்கிற கம்ப்யூட்டர் அச்சுக் கோப்புத் துறையில் மூன்று மாதப் பயிற்சியும் பெற்றேன். எனக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டுள்ளது. எனக்குச் சீக்கிரமே நல்ல வேலை கிடைக்கும். என் குடும்பத்தை நல்ல நிலைக்குக் கொண்டு வருவேன்" இப்படிச் சொல்கிறார் சரஸ்வதி என்கிற இருபது வயது இளம் பெண்.

அப்பாவால் கைவிடப்பட்ட மரகதத்தின் கதையும் இது போன்றதுதான். இவர் மார்க்கெட்டிங் பயிற்சி பெற்று, பட்டதாரிகளுடன் இன்டர்வியூவில் போட்டியிட்டு, வேலைக்குத் தேர்வாகி இருக்கிறார். பெரிய கம்பெனி ஒன்றில் மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவ் ஆவதே தன் லட்சியம் என்கிறார் மரகதம்.

இவர்களைப் போல சுமார் எண்பது பேர். மெக்கானிக், நர்ஸிங் அசிஸ்டெண்ட், விற்பனை மற்றும் கன்ஸ்யூமர் ரிலேஷன்ஸ் போட்டோ மற்றும் வீடியோகிராபி, மார்க்கெட் ரிசர்ச் என்று பல்வேறு பிரிவுகளிலும் மூன்று மாத வகுப்பறைப் பயிற்சியும், மூன்று மாத நடைமுறைப் பயிற்சியும் பெற்று, சொந்தக் காலில் நிற்கத் தயாராகி இருக்கிறார்கள்.

இவர்களுக்கெல்லாம் இலவசமாகப் பயிற்சி அளித்திருப்பது சென்னை லேப்ஸ் என்கிற நிறுவனம். ஹைதராபாதில் இயங்கி வரும் டாக்டர் ரெட்டி பவுண்டேஷனின் சென்னை பிரிவு தான் இந்த சென்னை லேப்ஸ். இவர்கள் ஹைதராபாத்தில் இது போல இரண்டாயிரம் பேருக்குப் பயிற்சி



• நர்ஸிங் உதவியாளர் பயிற்சி பெற்ற மாணவிகள்

# சொந்தக்காலில் நில்லுங்க!

யளித்ததில் பலருக்கு நல்ல வேலையும் கிடைத்திருக்கிறது.

டாக்டர் ரெட்டி பவுண்டேஷனைச் சேர்ந்த நளினி கங்காதரன் சொல்கிறார்.

"போட்டிகள் நிறைந்த உலகில் புத்திசாலி மாணவர்களுக்கு இஞ்சினியரிங், டாக்டர் படிப்புக்கு சீட் கிடைக்கிறது. அப்படிக் கிடைக்காதபட்சத்தில் பெற்றோர் பெரும் பணம் கொடுத்து, தனியார் கல்லூரிகளில் இடம் பிடித்து விடுகிறார்கள். ஆனால் பள்ளிப் படிப்பைக் கூட, முடிக்க முடியாமல் போன ஏழைக் குடும்பங்களைப் பற்றி நினைத்துப் பார்க்கிறோமா?

"அதைப் பற்றி நாங்கள் யோசித்ததன் பலன்தான் இத்தகைய பயிற்சி வகுப்புகள். அதிர்ஷ்டவசமாக முருகப்பா குரூப், கிஸ்ராஜ் மோட்டார்ஸ், சுந்தரம் மெடிக்கல் பவுண்டேஷன் போன்ற நிறுவனங்கள் எங்களுக்குக் கைகொடுக்க முன் வந்திருக்கிறார்கள். உலக மயமாக்கலின் பயனாக, எந்தெந்த துறைகளில் எல்லாம் புதிய வேலை வாய்ப்புகள் உள்ளனவோ, அவற்றுக்கெல்லாம் தகுதியானவர்களை, குடிசைப் பகுதியிலிருந்து இளைய தலைமுறையினரைத் தேர்ந்தெடுத்து, பயிற்சியளிப்பதுதான் எங்கள் திட்டம். இந்தப் பணியில் இன்னும் பலரும் எங்களுக்குக் கைகொடுக்க வேண்டும் என்பது எங்கள் விருப்பம்" என்கிறார் நளினி எதிர்பார்ப்புடன்.

**"எனக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டுள்ளது. எனக்குச் சீக்கிரமே நல்ல வேலை கிடைக்கும். என் குடும்பத்தை நல்ல நிலைக்குக் கொண்டு வருவேன்"**

— மௌலி

# மனம் உருகுதே

வராண்டா, ஹால், ரேழி, இடப்பக்கம் சமைய லறை, வலப்பக்கம் ஸ்டோர் ரூம் அதைத்தாண்டி துணி உலர்த்தும் திறந்தவெளி, தெற்கத்திக் காற்று பிய்த்துக் கொண்டு போகின்ற சுகமான மலை உச்சி.

அவர் உலவிக் கொண்டி ருக்கின்ற இந்த இடம் இனி மேல் இல்லையென்று ஆகப் போகிறது. காற்றும், தனிமையும் காணாமல் போய் எங்கோ சந்தில் குடியிருக் கப் போகிறோம் என்று நினைக்க நினைக்க ராதா கிருஷ்ணனுக்கு துக்கம் பொங்கியது.

ஏதேனும் செய்ய வேண்டும். ஏதேனும் செய்ய வேண்டும் என்று அவர் அவசரப்பட்டார். உள்ளுக்குள் குமுறினார். எப்படி எதிர்ப்பைக் காண்பிப்பது என்று தலைகுனிந்து யோசித் தார்.

தலையைக் கீழாக வைத்துச் சிந்திக்கிற பொழுது கீழான சிந்த னைகளும், தலையை நேராக வைத்துச் சிந்திக் கிறபொழுது நேர்மை யான சிந்தனைகளும் ஏற்படும் என்பது ராதா கிருஷ்ணனுக்கு யாரும் சொல்லித் தர வில்லை.

இது அவர் பலவீனம்.

அவன் சொத்துக்கணக்கு ஒண்ணு இருக்கே. நம்மள இப்போ சரி பண்ணித்தரச் சொன்னாரே. அதை அப்படியே ஜெராக்ஸ் எடுத்து இன்கம்டாக்ஸ்ல கொடுத்துடலாமா. எப்படி மாட்டுவான்? இத்தனைச் சொத்தும் டிக்ளேர் பண்ணியிருக்க மாட்டான். பேங்க் அக்கவுண்ட் பண்ணியிருக்க மாட்டான்.

சட்டென்று நினறு வீட்டுக்குள் போனார். சாவியை எடுத்துக் கொண்டார். கீழே இறங்கினார். கதவு திறந்தார். ஆபீஸிற்குப் போய் பீரோ திறந்து



அந்தக் குறிப்பிட்ட ஃபைலைத் தேடி எடுத்துக் கொண்டார். மேலே வந்தார். அந்த ஃபைலை எடுத்து கட்டிலுக்குக் கீழே போட்டார். அதன்மீது துணி விரித்தார். சாவியை வழக்கமான இடத்தில் மாட்டினார்.

இருக்கட்டும். என்னிக்கு இருந்தாலும் ஏதாவது பயன்படும். இன்கம்டாக்ஸ்ல நமக்கு யாரைத் தெரியும்?

மறுபடியும் யோசித்தார்.

ஷண்முகக்கனி நாடாரிடம் என்ன சொல்ல முடியும். எப்படித் தூண்டி விட முடியும்.

அவருக்குச் சட்டென்று அங்கே போய் பேசினால் என்ன என்று தோன்றியது. சட்டையை மாட்டிக் கொண்டார். இறங்கிக் கீழே போனார்.

**நா**டாரும் அவர் மகனும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

"வாங்க ஐயரே. வாங்க" என்று பலமாக

# பாலகுமாரன்




வரவேற்றார்கள்.

"என்ன காலங்காலையில எங்கயோ போயிட்டு வந்தீங்க போலிருக்கு. கோயிலுக்கா? உங்கம்மா என்னமோ மடிப்பிச்சையா உட்கார்ந்திருந்தாங்களாம். நம்ம கிளார்க் ஒருத்தன் பார்த்துட்டு, பார்க்கவே கஷ்டமா இருக்கு ஸார்னு சொல்றான். என்ன ஆச்சு? எதுனா ரொம்ப தொந்தரவு பண்றாங்களா? எங்கிட்ட சொல்லுங்க. வெட்டிப் போட்டுடறேன் படவா!"

நாடார் உறுமினார்.

"நான் போறேன்னு ஒத்துனுட்டேன் ஸார். எதுக்கு வெட்டணும்?"

"நீங்க போகாதீங்கன்னு தானே சொல்றேன். ஏதாவது காக வாங்கிக்கிட்டுப் போங்கன்னு சொல்றேன்."

"காசெல்லாம் கேட்டா அசிங்கம் ஸார்."

"ஒரு அசிங்கமும் இல்லை. வழக்கமா நடக்கறது தான். இதுக்கு பகுடின்னு பேரு. இங்க ஒரு அடிக்கு அடி நிலத்தை ஒருத்தன் பத்து வருஷமா அனுபவிச்சுட்டு நகருவதா இருந்தாக் கூட லட்ச ரூபா பகுடி கொடுத்தே ஆவணும். இவ்ளோ பெரிய வீட்டைக்

காலி பண்ணப் போறீங்க, எதுவும் கேட்காத ஏன் போகணும். மிரட்டலுக்குப் பயந்துடாதீங்க. என்னைக் காலி பண்ணச் சொல்றது தப்புன்னு ஒரு மனு போடும்...... மனு போடும். அடிக்க வராங்கன்னு கிரிமினல் கேஸ் போடும்."

"அப்போ அடிக்கறதை விட்ருவானா. இன்னும் வேகமா அடிப்பான். கூட நாலு பேரைச் சேர்த்து வைச்சுக்கிட்டு அடிப்பான். அடிச்ச பிறகு கிரிமினல் கேஸ் போட்டு என்ன. போடாத என்ன. என்னால அடி தாங்க முடியுமா?"

"ஒண்ணுமே இல்லாமயா போகப் போறீங்க?"

"இல்லை. ஏதாவது செய்யணும். என்ன




"ஆபீஸ்ல பல இடங்கள்ல வாழு! வாழவிடு!ன்னு ஏன் எழுதிவச்சிருக்காங்க?"

"லஞ்ச ஒழிப்பு அதிகாரிகளுக்காக எழுதி வச்சதுங்க அது!"

– சீர்காழி வி. ரேவதி

செய்யறதுன்னுதான் தெரியலை."

"எனக்கு இருபது லட்சரூபா வரைக்கும் கொடுக்கத் தயாரா இருக்காங்க. இவன் பத்து ரூபா. இவன் ஒரு ஆளுக்கு விக்கப்போறானே அவன் பத்து ரூபா. இரண்டு பேரும் சேர்ந்து ஆளுக்குப் பத்து பத்தா இருவது ரூபா தரப்போறாங்க. நான் நகர்ந்துடலாம்னு இருக்கேன். அம்பத்தூர் பக்கம் ஒண்ணேகால் கிரவுண்ட் பேசிக்கிட்டிருக்கேன். முடிஞ்சுடும் மாதிரிதான் இருக்கு. குடிசை போட்டு வைச்சுருக்காங்க. ஆளுக்கு ஆயிரம் இரண்டாயிரம் கொடுத்து வேறே இடத்துல குடிசை போட்டுக்கடான்னு தென்னை ஓலை கொடுத்து நகர்த்திடணும் அவ்ளோ தான்."

"குடிசை போட்டு யார் நகர்ந்திருக்கா?..."

"கொளுத்திப்புடுவோமில்ல!"

பையன் முஷ்டி மடக்கிச் சொன்னான்.

"ஐயரே, இத்தனை நான் வேலை செய்திருக்கிறீரே. அவன் சிண்டு உம்ம கையில இல்லாதையா இருக்கும். ஏதாவது ஒரு இடத்துல மாட்டிவிட வேண்டியதுதானே."

"எங்கிட்ட சிண்டு இருக்கு. என்ன பண்றதுன்னுதான் யோசனை பண்ணிண்டிருக்கேன்."

"என்ன வகையான சிண்டோ?"

ஆர்வமாக நாடார் கேட்டார்.

"அவருடைய இன்கம்டாக்ஸ் சமாசாரம் முழுக்க எங்கிட்ட இருக்கு. அவர் சொத்து விவரம் மொத்தமும் எங்கிட்ட இருக்கு. அவர் சொத்து விவரமும் இன்கம்டாக்ஸ் விவரமும் சரியா ஒத்துப்போகலை. நிறைய ஏமாத்தியிருக்காருன்னு தெரியுது."

"அக்கமக்கா.... அதெப்படி உம்மகிட்ட மாட்டுச்சு?"

"என்னை அதை சரி பண்ணச் சொன்னாரு. ஆடிட்டருக்கு சப்மிட் பண்ணணும். எப்படிச் செய்யறதுன்னு எங்கிட்ட வந்து கேட்டாரு. கொடுத்துட்டுப் போங்கன்னு சொன்னேன். அந்த ஃபைல் மொத்தமும் ஒழுங்கு பண்ணி இப்போதான் எடுத்து வைச்சேன். நடுவுல இந்த கலாட்டா ஆகிப்போச்சு. ஆடிட்டரே இதெல்லாம் ஒழுங்கு பண்ணி அட்வான்ஸ் டேக்ஸ் கட்டிட்டாப்போல. இதை எங்கிட்ட வந்து கேட்கறதுக்கே இவரு மறந்து போயிட்டாரு."

"உள்ளே தள்ளிடுங்க அப்போ."

"உள்ளே தள்ளினா எனக்கு என்ன லாபம்? அவன் மாட்டிக்கறதைவிட மாட்டிக்கப்போறேன்னு பயப்படறது நல்லது இல்லையா."

"இன்கம்டாக்ஸ் விட்ருமய்யா. நீ ஒரு கேஸ் போடும். என்னை அடிக்கறானுங்க. என்னை வந்து காலி பண்ண சொல்றாங்க. எனக்குப் போக்கிடமே இல்லை. எங்க தகப்பனார் காலத்துலேருந்து நான் இங்கதான் இருக்கேன், அப்படின்னு சொல்லுங்க. எனக்குத் தெரிஞ்ச வக்கீல் ஒருத்தன் இருக்கான். அவனை விட்டு போன் பண்ணச் சொல்லுங்க. நான்தான் ராதாகிருஷ்ணனுக்கு வக்கீல். அவரை மிரட்டறியாமே, சரியா இல்லை. நான் தான் வந்து பேசப்போறேன். எப்போ ரெடியா இருப்பே அப்படின்னு கேட்கலாம். அவர் பேர் சொன்னாலே பயப்படுவார்."

"யார் அந்த வக்கீல்?"

"சத்தியநாராயணன். சீனியர் வக்கீல். அவருகிட்டதான் இந்த சங்கரய்யர் இருந்தாரு."

"எந்த சங்கரய்யரு?"

"இப்போ பூஜையெல்லாம் பண்றாரே அவரு."

"அவர்கிட்ட இருந்தாருன்னா என்ன? குமாஸ்தாவா?"

"குமாஸ்தா மாதிரி இருப்பாரய்யா? அவர் குமாஸ்தா இல்லை. அவரும் வக்கீலுக்குப் படிச்சவருதான். சத்தியநாராயணன். அவருக்குச் சொந்தக்காரரு. அவர் படிக்க வைச்சு தான் சங்கரன் படிச்சாரு. சங்கரனை பி.எல்: படிக்க வச்சுட்டு வெறுமனே குமாஸ்தா மாதிரி நடந்துப்பாரு. சத்தியநாராயணனுக்கு உதவியா இருப்பாரு. சத்தியநாராயணன் படிக்க வேண்டிய கேஸை, நடத்த வேண்டியதை அவர் ஒரு தரம் நல்லா பார்த்துட்டு தான் தருவாரு. அவரு பார்த்துட்டுக் கொடுத்தார்னாக்க எல்லா கேஸும் ஜெயிச்சுடும். சத்தியநாராயணன் சாராய கேஸுக்கும், அடிதடி கேஸுக்கும் போயிட்ட பிறகு அப்பா... என்னை விட்டுடு... நான் 'போறே'னு சொல்லிட்டு அவரை விட்டுட்டு வந்துட்டாக. சங்கரய்யர் வந்த பிறகும் சத்திய நாராயணன் சோடை போகலை. ஊர்ல இருக்கற அத்தனை ரௌடிக்கும் சத்திய நாராயணன்தான் வக்கீல். சத்தியநாராயணன் வராருன்னா மத்த வக்கீல் பயப்படறான். வக்கீல் பிரமாதமான ஆளுங்கறதுக்கு இல்லை. அவரைச் சுத்தி ஆளு இருக்கு. படை இருக்கு எவனையாவது ஏவி விட்டாருன்னா கையைக் காலைச் சீவிடுவான் அப்படிங்கறதுக்காகவே பயப்படறான்."

**ம**றுபடியும் சங்கரய்யர் பெயரைக் கேட்டபோது ராதாகிருஷ்ணனுக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"அந்த சங்கரரை உங்களுக்குத் தெரியுமா."

சத்தியநாராயணனை விட்டுவிட்டு சங்கரன் பற்றி விசாரித்தார்.

"போய்க் கேட்கச் சொன்னாங்க. நம்ம நண்பர்கள். போய்க் கேட்டோம்."

"என்னது?"

"இந்த இடத்தைக் காலி பண்ணிட்டுமா. இறுக்க புடிச்சிக்கட்டுமான்னு. அவருதான் சொன்னாரு காலிபண்ணிடு. நூறு வருஷத்து கட்டடத்துல நீ உட்கார்ந்து என்ன பண்ணப் போற? இன்னிக்கு இல்லைன்னா இன்னொரு நாள் தலையில விழுந்துடும். இப்பவே இடம் பார்த்து வேற இடம் போய் ஊனிக்கிட்டாக்க உன் புள்ளை பெரிய ஆள் ஆகறதுக்குள்ள நீயும் கம்பெனியை நல்லா வளர்த்துடலாமில்லையா. நீ வயசான பிறகு உன் புள்ளை போய் இன்னொரு இடம் புழுங்கறதவிட நீயே இடம்புடிச்சு உன் புள்ளைக்குக் கொடுக்கறது பெட்டர் இல்லையா அப்படின்னு கேட்டாரு. நான் யோசனை பண்ணி ஆமாங்க அதுதான் சரின்னேன். நல்ல காசா வாங்கிடு. நகர்ந்துடு அப்படின்னாரு. இதனாலதான் நான் நகருவதற்குண்டான விஷயத்துக்குச் சொல்லி அனுப்பிட்டேன். நீங்க வேணா அவரையும் போய்ப் பாருங்களேன்."

"போய்ப் பார்த்தோமே."



"தலைவர் ஓலை விசிறியும் கையுமா அலையறாரே..ஏன்?"

"கைதானால் ஜெயில்ல மின் விசிறி கிடைக்காதுனு யாரோ சொல்லியிருக்காங்க!"

– அம்பை தேவா

"எங்க?"

"கோயில்ல உட்கார்ந்துகிட்டிருந்தோமில்ல அப்போ ஒரு ஆள் வந்து என்ன கஷ்டம். போய் சங்கரனைப் பாருங்கன்னாங்க. போய் அங்க நின்னோம். கீழ் வீட்ல கூப்டு உட்காரவச்சு குடிக்கத் தண்ணி கொடுத்து கை காலெல்லாம் கழுவிக்கச் சொன்னாங்க. மேலே போகலாம்னு நினைச்சுகிட்டிருக்கும்போது அங்கேந்து ஆள் அனுப்பி அப்புறம் பார்க்கலாம் போயிட்டு வாங்கன்னு சொல்லிட்டாரு. ஒரு மாதிரி வெறுப்பாயிடுச்சு."

"அடடே... அப்படியெல்லாம் வைச்சுக் காதய்யா, அவரு ரொம்ப விவரமான ஆளுய்யா."

"விவரம்னா எப்படி."

"உள்ள நுழைஞ்சவுடனேயே வாங்க நாடார் அப்படின்னாரு. சரி, நம்ம மூஞ்சி யிலதான் ஜாதி எழுதி ஒட்டியிருக்கு அப் படின்னு சொல்லிட்டு வணக்கம் ஐயா அப்ப டின்னேன். 'யாரு உங்க புள்ளையா?' ஆமாங் கன்னு சொன்னேன். மூணாவது சம்சாரத் துப் புள்ளையா அப்படின்னாரு. தூக்கி வாரிப்போட்டுது. எனக்கும் என் புள்ளைக் கும் தவிர வேற யாருக்கும் தெரியாது.

பதினெட்டு வயசுல ஒரு கல்யாணம். அந்தப் பொம்பளை என்கூட ரெண்டு வருஷம் இருந்து புள்ளை பெத்துட்டு செத் துப் போச்சு. அடுத்தது இருவத்தஞ்சு வயசுல ஒரு கல்யாணம். அந்தப் பொம்பளை ஒழுங்கா சீர் செய்யலைன்னு அவங்க அப்பா அம்மாகிட்டபோய் சண்டை போட் டுது. அவங்க ஏதோ தடிமனா வார்த்தை சொல்ல அங்கேயே தூக்குப்போட்டுக்கிட்டு செத்துப் போச்சு. இது மூணாவது மனைவி. இவ வந்தபிறகுதான் வாழ்க்கை நல்லபடியா ஆச்சு. இதை அப்படியே புட்டு வைச் சாருய்யா. சொந்தக்காரன் பலபேருக்கே தெரியாது! கூட நின்னு பார்த்த மாதிரி பல விஷயங்கள் சொன்னாரு."

"என்னா குறியா, யட்சினியா?"

"இதெல்லாம் நமக்குத் தெரியாது. பத்து பைசா காசு வாங்கலை. எதனா செய் யணுமே அப்படின்னேன். அப்படியா இன்னிலேர்ந்து நாலாவது பௌர்ணமி காளிகாம்பாள் கோவில்ல பூஜைக்கு யாரும் பணம் கட்டலை. வேணும்னா நீ கட்டிரு அப்படின்னாரு. ஓடிப்போய் கட்டினேன். வீடு முழுக்க சன்னதிக்கு நேரா உட்கார்ந்து கண்குளிர பார்த்தோம். வீட்லே ரொம்ப சந்தோஷமாயிடுச்சு. நாங்க சாமி கும்பி டறதுன்னா ஆடு வெட்டறது, கோழி அடிக் கறதுன்னுதான் இருப்போமே தவிர இப்படி யொரு சன்னதிக்குப் பக்கத்துல உட்கார்ந்து பால் அபிஷேகமும், தேன் அபிஷேகமும் பார்த்ததில்லை. எங்க வீட்டு அம்மா ஒரே அழுகை. இனிமே நாம அதெல்லாம் பண்ணாத இந்த மாதிரி பண்ணணுங்க அப்படின்னு சொல்லிட்டாங்க. அடுத்த பௌர்ணமிக்கு அடுத்த பௌர்ணமி ஆள் இல்லைன்னாங்க. அதுக்கும் அப்பவே துட்டு கட்டிட்டு வந்துட்டேன். அந்த சங்கரர் சாதா ரண ஆள் இல்லைங்க. தப்பா பேசிடாதீங்க."

தீர்மானமான குரலில் நாடார் சொல்ல, அந்த இடத்தைவிட்டு எழுந்து மேல்மாடிக் குப்போய் உலாவியபடியே யோசிக்க வேண்டும் என்கிற ஒரு வேகம் ராதாகிருஷ் ணனுக்கு வந்தது.



அவர் ஷண்முகக்கனி நாடாரை விட்டு எழுந்து மாடிக்குப் போய் உலாவத் துவங்கி னார்.

'பயமுறுத்துகிறீர்களா. உங்களைக் கடவுள் என்று காட்ட முயற்சிக்கிறீரா. நான் எங்கு போனாலும் உங்கள் பெயரைச் சொல்லும் வண்ணமே உங்களால் செய்ய முடியுமா. மிகப் பெரிய யோகியா. சித்தபுருஷரா. அவதாரமா. எந்த அவதாரமும் தன்னை அவதாரம் என்று சொல்லிக் கொள்வ தில்லை. எந்த யோகியும் தன்னை யோகி என்று கூப்பிடு என்று சொல்வதில்லை. எந்த அவதார புருஷரும் எவரையும் வற்புறுத்து வதில்லை. நீங்கள் ஏன் என்னைத் தொந்தரவு செய்கிறீர்கள். எதற்காக என்னை வற்புறுத்து கிறீர்கள். பெரிய கித்தாப்பான ஆள் என்று என்னைச் சுற்றியிருப்பவர்களைச் சொல்ல வைப்பதில் உங்களுக்கு என்ன சந்தோஷம். நான் என்ன அப்படி முக்கியம். நான் வர மாட்டேன். இப்படி நடக்க நடக்க உங்கள் மீது ஒரு வெறுப்பு வருகிறது. மற்றவர்கள் உங்களைச் சொல்லச் சொல்ல ஒரு விலகல் ஏற்படுகிறது. எனக்கு நீங்கள் தேவையே இல்லை.

# அட... இதுதானா!

படங்கள்: ஸ்ரீஹரி

பணியிடத்தில் குறை ஏற்பட்டு வேலை போவது என்பது சாதாரண விஷயம். என் அதிகாரத்திற்கும் அதன்பால் ஏற்பட்ட செல்வத்திற்கும் கம்பீரத்திற்கும் ஆசைப்பட்டது வாஸ்தவம்தான். ஆனால், அதுவே சாகவதம் என்று நான் நினைக்கவில்லை.

எங்கள் முன்னோர்கள் வலிமையானவர்கள். அவர்கள் மிக எளிமையாக வாழ்ந்திருக்கிறார்கள். உஞ்சவிருத்தி செய்து வாழ்ந்த ஒரு தம்பதியினரும் எங்கள் வம்சத்தில் உண்டு. நானும், ரேவதியும் மஞ்சள் துணியுடுத்தி ஒவ்வொரு தெருவின் முனையிலும் நின்று ராமாயணம் சொல்லி எங்களால் இயன்ற காசை பிச்சையெடுத்து சம்பாதித்து அதில் கிடைப்பதை உண்டு வாழ்வோம். காளிகாம்பாள் கோவிலில் உட்கார்ந்து மடிப் பிச்சை கேட்டது நாடகம். உண்மையாகவே பிச்சையெடுக்க என்னால் முடியும்.

ஆசை உள்ளவனும், கர்வம் உள்ளவனும் வாழ பயந்தவனும்தான் உங்களைப் போன்றோர்களை அண்டி வாழ்வான். உங்களைப் போன்ற மந்திர வித்தைக்காரர்களிடம் மயங்குவான். நீங்கள் எடுத்தவுடனேயே அதட்டிப் பேசுவதாலேயே பலபேர் உங்களைக் கண்டு அச்சப்படுகிறார்கள். உங்களால் கெடுதல் வந்துவிடுமோ என்று பயப்படுகிறார்கள்.

தீதும் நன்றும் பிறர்தர வாரா
பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக்கல்.

சங்கரய்யர் என்னை என்ன செய்துவிட முடியும். நீங்கள் நன்மை செய்ய முடியுமா. தீமை செய்ய முடியுமா. அதற்கு நானே காரணம். ஒரு பொழுதும் உங்களை நோக்கி நான் வரமாட்டேன்.

இந்த ராதாகிருஷ்ணனுக்கு நீங்கள் தேவையில்லை.

– தனக்குள்ளேயே மிக வேகமாக ராதாகிருஷ்ணன் பேசினார்.

கீழே யாரோ கதவு திறக்கச் சொல்லி மணியடிப்பது கேட்டது. ரேவதி எழுந்து போக அவளைத் தடுத்து நிறுத்திவிட்டு, சட்டை அணிந்து கொண்டு அவர் கீழே போனார்.

அந்தக் கட்டடத்தின் சொந்தக்கார இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

"என்னா?..."

அவர் வெறுமனே அவனைப்பார்த்து ஒரு கர்ஜனையாய் கேட்டார்.

அவன்மீது அவருக்குக் கடும் கோபம் இருந்தது.

"எப்போ காலி பண்ணப்போறீங்க வீட்டை?"

"அதான் சொல்லிட்டேனேப்பா. திரும்பத் திரும்ப வந்து வேளை கெட்ட வேளையில கேட்டுகிட்டிருக்கியே."

"இதோ பாருங்க. இது என் வீடு. நான் எப்போ வேணா வருவேன்."

"முடியாது. நான் குடியிருக்கும்போது நீ எப்போ வேணா வரமுடியாது. இது காலி வீடு இல்லை. பாழ்மனை இல்லை. அழிஞ்சு போன இடமில்லை. நான் இருக்கற வரைக்கும் இந்த வீடு என்னுடைய வீடு. நீ கேட்டுக் கிட்டுதான் வரணும்."

"நான் என்னா சொல்றேன்னா..."

"எதுவும் சொல்ல வேணாம். வெளியே போடா!"

"என் வீட்லே வந்து என்னை வெளியே போடான்னு எப்படிச் சொல்லலாம்?"

"வெளிய போடா!"

அவர் உரத்த குரல் கேட்டு ரேவதி கீழே ஓடி வந்தாள்.

தெருவில் போனவர்கள் நின்று திரும்பி வேடிக்கை பார்த்தார்கள்.

"போ... வெளிய போ!"

அவனைத் திருப்பி கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினார். எதிர்பார்க்காது அவன் கால் தடுமாறி தெருவில் வந்து விழுந்தான்.

அவருக்கு 'ஐயோ' என்ற ஒரு பயம் ஏற்பட்டது.

(தொடரும்)

● பி. ஜெயப்பிரகாஷ்,
சர்க்கார்பதி.

? அறிவாலயத்தில் தி.மு.க. தொண்டர்களுக்கு, கொரிய தற்காப்புக் கலையான டேக்வாண்டோ பயிற்சி தருவது தீவிரவாதத்தின் முதல் படிதானே...?

! தற்காப்புக் கலையை யார் வேணுமானாலும் பயில லாம். அது தீவிரவாதமா காது; அதையே தாக்கு

# கஞ்சித்தொட்டி அவலம் நிகழ்ந்துள்ளதே?

தலுக்குப் பயன்படுத்தும் போதுதான் தீவிரவாதம் தலையெடுக்கிறது!

● வீ. ரூபஸ்,
கோவை - 37. ❑

? எது பகுத்தறிவு? எது பட்டறிவு?

! அழைப்பு கோரியவர்களுக்குத்தான் அழைப்பு அனுப்புவோம் என்று வீம்பாகச் சொல்வது பகுத்தறிவு. ஜெ அழைப்பு பெற முயற்சி செய்திருக்கிறார், மறுக்கப்பட்டுள்ளது என்று தெரிந்த பிறகு; அப்துல் கலாம் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர், எனவே தமிழக முதல்வரை அழையாதது தவறு என்பதை உணர்ந்த பிறகு மன்னிப்புக் கேட்பது பட்டறிவு!

● ஜோ. ஜெயக்குமார்,
நாட்டரசன்கோட்டை.

? 'காவிரி நீர்ப் பிடிப்புப் பகுதியில் மழை பெய்தால், தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் திறந்து விடப் படும்' என்கிறாரே எஸ்.எம். கிருஷ்ணா?

! சர்வதேச நியாய அடிப்படையில் ஆயக்கட்டு உரிமைகள் இந்நாட்டில் மதிக்கப் படுமானால், காவிரி நீருக்கான முதலுரிமை தஞ்சை விவசாயிகளுக்குத்தான். அவர்களுடைய குறைந்தபட்ச தேவை தீர்ந்த பிறகுதான் கர்நாடகம் தன் பங்குக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். இங்கே நிலைமை தலைகீழாகி விட்டது. அதுதான் பிரச்னை. இதை நீதிமன்றம் வன்மையாகச் சொல்ல வேண்டும்.

• பகுத்தறிவும்....



• நாகாக்க!




• உதைபடும் விளையாட்டு!

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? அனுமன் கூட அசோகவனத்தில் சீதையிடம் பேசும் போது யோசித்து, மனத்திற்குள் ஒத்திகை பார்த்துப் பேசினானாமே - இதிலிருந்து என்ன தெரிகிறது...?

! எண்ணித் துணிக கருமந் - துணிந்தபின் எண்ணுவ மென்ப திழுக்கு

# நீங்கள் கேட்டவை – தராசு

● கே. கணேசன்,
சென்னை - 16.

? 'கடந்த ஐம்பது ஆண்டுகளில் நாட்டின் பல பாகங்களில் கலவரங்கள் நடந்துள்ளன. ஆனால் நரேந்திர மோடியைப் போல் வேறெந்த முதல்வரும் இப்படி இரும்புக்கரம் கொண்டு கலவரத்தை அடக்கியதில்லை' என்ற அத்வானியின் புகழாரம் பற்றி...?

! அந்த நற்சான்றிதழை வழங்க அம்னெஸ்டி இன்டர்நேஷனல் அமைப்பை அனுமதித்திருக்கலாமே...! விஸா மறுத்து அவர்களை இந்தியாவுக்குள் வரவிடாது செய்வானேன்!



* ... பட்டறிவும்!

● எஸ். மாலதி, முசிறி.

? 'சேக்கிழார் விழாவில் பூசியதை நான் பக்தி விபூதியாகக் கருதவில்லை; அது தமிழ் விபூதி' என்கிறாரே காளிமுத்து?

! மந்திரமாவது நீறு;
தந்திரமாவதும் நீறு!



* தமிழ் விபூதி!

● ரோஸலின் சாமுயல், மும்பை - 16. *

? காஷ்மீர் மக்கள் இன்னும் எத்தனை நாள் தங்கள் உயிர்களைத் தீவிரவாதிகளுக்குப் பலியாகக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும்...?

! காஷ்மீர் பிரச்னை, பாக் அரசியல்வாதிகளின் survival ஆக இருக்கும் வரை; இதைப் புரிந்து கொண்டு சாணக்கியத்துடன் நம் தலைவர்கள் செயல்படாதவரை. அதற்கு இவர்கள் தீனி போட்டுக் கொண்டிருக்கும் வரை!

● எஸ். பாலசந்தர்,
திருவாரூர்.

? திருச்சி வானொலி நிலையம் மின் கட்டணம் செலுத்த பணம் இல்லாமல் திண்டாடுகிறதே? இதே நிலை தொடர்ந்தால் வானொலியின் கதி...?

! தனியார்மயம் தான்! அப்புறம் தரம் கேள்விகுறி தான்!



* பழைய பல்லவி!

● ஜி. மதுர பாஷிணி, திருவிடைமருதூர்.

? தமது மண்ணின் மைந்தன் பதவியேற்பு அன்று சேதுபதி மன்னர் பதவியேற்பின் போது நடத்தும் ருத்ராபிஷேகத்தை ராமநாதஸ்வாமி கோயிலில் நடத்தி சிலிர்க்க வைத்த ராமேஸ்வரம் மக்களைப் பற்றி தங்கள் கருத்து...?

! இஸ்லாமியர்களுக்கும் சில பாத்தியதைகள் அக் கோயிலில் பரம்பரையாக உண்டு. அதை மாற்றாமல் மதிக்கும் அவர்களைப்

❑ ரூ. 100 பரிசு பெறுபவர் :
வீ. ரூபஸ்
48 B, எல் எம் எல் காலனி,
பாப்பநாயக்கன்பாளையம்,
கோவை - 641 037.

* ரூ. 50 பரிசு பெறுபவர் :
ரோஸலின் சாமுயெல்,
மல்டிலிங்க்ஸ்,
மானேஜ்மென்ட் பிரைவேட் லிமிடெட்,
முகல் லேன், மாஹிம்,
மும்பை - 400 016.

கல்கி




VBC Jewellery

House of Vummidi

* 78, G.N.Chetty Road, Vani Mahal Circle, (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017. ✆ : 8229556, 8229560
* 11-B, Nageswara Rao Road, Panagal Park, T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

### ஏமாத்துங்க எரிகல்லை!

பயங்கரமான எரிகல் ஒன்று பூமியை நோக்கி வேகமாக வந்து கொண்டிருக்கிறது. அது மோதினால் உலகத்தின் கால் பங்கு சாம்பலாகிவிடுமாம்!

விலைவாசி, தண்ணீர்ப் பஞ்சம் போன்றவற்றைக்கூட எப்படியோ சமாளித்து வரும் நமக்கு இந்த எரிகல்லைச் சமாளிக்கவா முடியாது? என்ன செய்தால் எரிகல் இந்தியாவை மட்டும் தாக்காமலிருக்கும்? தமாஷ் கற்பனை இரண்டுக்கு. தலா நான்கு கிராம் தங்கம் பரிசு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**புன்னகைப் போட்டி - 26**

என்று குறிப்பிட்டு முகவரியுடன் அனுப்புங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : 19.8.2002

ஆசிரியர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.



பாராட்டலாம்.

● வசந்தகாந்த், கருப்பம்புலம்.

? நாகாக்க குறள், யாருக்கு இப்போது தேவை...?

! காலின் பாவெல் - காஷ்மீர் தேர்தலைக் கண்காணிக்க அயல்நாட்டாரை அனுமதிக்க வேண்டும் என்று அனாவசியத்துக்கு இந்தியாவின் உள் விவகாரத்தில் மூக்கு நுழைக்கிறார்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 20.

? போலீஸின் குறைகளை அறிந்து அதற்குத் தீர்வுகாண முதல்வர் ஜெயலலிதா, அவர்களுடன் சந்திப்பு நடத்தியிருக்கிறாரே?

! குறைகளைக் கேட்டறிந்ததாலேயே நற்பெயர் ஏற்பட்டு விடாது. அவர்களின் நியாயமான குறைகள் தீர்த்துவைக்கப்பட வேண்டும். போலீஸாரின் அதிருப்தி பொது மக்கள் மீதுதான் பாயும். அதற்கு அத்துறையில் வாய்ப்புகள் மிக அதிகம்.

● சி. எஸ். ராஜமழை, சின்னமனூர்.

? 'அகில இந்திய ரீதியில் நோக்கினால் இந்தியாவில் கால்பந்துக்கு ஆதரவு இல்லை' என்று கேப்டன் பாய்சாங்பூட்டியா சென்னையில் பேட்டி அளித்துள்ளாரே...?'

! கிரிக்கெட் மோகத்தில் எல்லோரும் மயங்கிக் கிடக்க மற்ற விளையாட்டுகள் ஃபுட்பால் ஆடப்படுகின்றன!

● எஸ். பி. நீலமேகம், சென்னை - 24.

? பக்தியோடு அம்மன் காலில் விழுவது 'பய'பக்தியோடு அம்மா காலில் விழுவது - எது அதிக பலன் தரும்?

! முன்னதில் தாமதமாகவாவது பலன் கிடைக்கும் என நம்பலாம். பின்னதில் அந்த நம்பிக்கையும் பொய்த்துப் போக வாய்ப்பு உண்டு.

● அமுதவன், நரசிங்கநல்லூர்.

? இன்றைய திரைப்படங்களை தாமஸ் ஆல்வா எடிசன் பார்க்க நேர்ந்தால்...?

! தொழில்நுட்ப முன்னேற்றம் கண்டு பிரமித்துப் போவார்!

● ஆர். ராமசுப்ரமணி, திருவாரூர்.

? ஒரு மனிதனுக்கு மனோபலம் எந்த அளவுக்கு அவசியம்?

! தருமமிகு சென்னையில் ஐந்நூறு தெரு நாய்களை விஷ ஊசி போட்டுக் கொன்றார்கள் என்ற செய்தி படித்தும் இதயம் வெடிக்காமல் இருக்கும் அளவுக்கு!

கஷ்டம்ப் வி
தேவும் தாமஸ்,

# இறக்கி வைத்த சரக்கு!

## கருமமே கார் ஆயினார்

திருமணத்தின் முக்கிய ஐட்டமான திருமண கேக்கை மணமகன் வெட்டி, ஒரு துண்டை எடுத்து அழகான மணமகளின் வாயில் ஆசையாக ஊட்ட வேண்டிய நேரம். மணமகன் கேக்கை வெட்டாமல், ஓட்டமாய் ஓடினார். காரை எடுத்துக் கொண்டு, துரத்திச் சென்று, பெரிய சேஸுக்குப் பிறகு ஓர் ஆசாமியை 'லபக்' என்று பிடித்தார். பிடிபட்டவர், 'பலே கார் திருடன். பிடித்தவர் போலீஸ் மாப்பிள்ளை. திருமணம் நடந்து கொண்டிருந்த இடத்துக்கு வெளியில் இருந்த கார் நிறுத்துமிடத்தில், சந்தேகத்துக்குரிய முறையில் நடமாடிக் கொண்டிருந்த ஆசாமியைத் தான் அவர் துரத்திச் சென்று பிடித்தார். திருமணத்துக்கு வந்திருந்த சக போலீஸ் நண்பர்கள், திருடனைக் கவனித்துக் கொள்ள, மணமகன் கேக் வெட்டி, தன் மனைவிக்கு ஊட்டினார்! இது நடந்தது ருமேனியாவில்.

## அடி ஆத்தி!

ரஷ்யாவில் உள்ள ரஷ்யன் ஆர்தோடாக்ஸ் சர்ச்சில் நடந்த பலூன் திருவிழாவில் பறக்கவிடப்பட்ட வித விதமான பலூன்களில் இரண்டைத்தான் படத்தில் காண்கிறீர்கள்.



• பலூன் பறக்குது!

## மிரண்டதெல்லாம் பேய்!

இதுவும் போலீஸ் சம்பந்தப்பட்ட சம்பவம்தான். நடந்தது ஜெர்மனியில். திடீரென்று போலீஸுக்குத் தொலைபேசி தகவல் வந்தது. யாரோ ஒரு முகமூடித் திருடன், ஒரு காருக்குள் ஒளிந்து கொண்டிருப்பதாகச் சொல்லி, கார் எண்ணையும் கொடுத்தார் ஒருவர். உஷாரான போலீஸ், செயலில் இறங்கியது.

அந்த ஏரியாவையே



• சாக்லேட் ஆடை

சல்லடைபோட்டுச் சலித்து கடைசியில் காரையும், அந்த முகமூடி மனிதனையும் கண்டுபிடித்தது. முகமூடி மனிதன் போலீசைக் கண்டதும் மிரண்டு போனான். 'ஐயோ! நான் முகமூடித் திருடன் இல்லை. பக்கத்தில் இருக்கும் நர்சரி ஸ்கூல் விழாவில் குழந்தைகளை மகிழ்விப்பதற்காக முகமூடி அணிந்து, பேய் போல வேடமிட்டேன். அவ்வளவுதான்'' என்று புலம்பினான். நர்சரி ஸ்கூலில் விசாரித்தபோது, இது உண்மைதான் என்று அவர்களும் கூற, போலீஸ் அசட்டுச் சிரிப்புடன் திரும்பிச் சென்றது.

## ஒட்டகத்தைக் கட்டிக்கோ!

ஆஸ்திரேலியாவில் ஒருவருக்கு திடீரென்று ஓர் ஐடியா! ஒட்டகப் பண்ணை ஆரம்பித்து, பால் வியாபாரம் செய்யத் தொடங்கியிருக்கிறார். ஒட்டகப் பால், ஆட்டுப் பால் போன்ற சுவையும், சத்தும் கொண்டிருப்பதால், அதற்கு நல்ல டிமாண்டு ஏறிவிட்டதாம். ஆனாலும் ஒரு சிக்கல். ஒட்டகங்கள் முரண்டு பிடிப்பதால், கட்டிப் போட்டு பால் கறக்க வேண்டியுள்ளதாம்.

## சொன்னானே ஒரு பதில்!

நம் ஊரில் அவசர போலீஸ் உதவிக்கு தொலைபேசி எண் 100 இருப்பது போல, அமெரிக்காவில் 911 இருக்கிறது. வழக்கமாக இருபத்து நாலு மணி நேரத்தில், சராசரியாக இருநூறு தொலைபேசி அழைப்புகள் 911க்கு வரும். அண்மையில், ஒரு நாளில் மட்டும் எண்ணூறு அழைப்புகள் வந்தன. பல சமயங்களில் "உதவிக்கு வாருங்கள்! நான் செத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று மட்டும் குரல் ஒலித்தது. சில சமயம் கேலியாகச் சிரிப்புக் குரல் கேட்டது. சந்தேகப்பட்டு, அந்த முகவரிக்குச் சென்றபோது, மைக்கேல் ஹோம்ஸ் என்ற இருபது வயது இளைஞன்தான் இப்படி விளையாடியிருக்கிறான் என்பது தெரியவந்தது. போலீஸ் கைது செய்தபோது, அவன் சொன்ன காரணம்: "போரடித்தது, பொழுது போகாததால் போன் பண்ணினேன்.''

## சாக்...லேட்?

கோலாலம்பூரில் உள்ள தேசிய மியூசியத்தில் சமீபத்தில் இந்த உடை காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. அப்படி என்ன விசேஷம்? இது முழுக்க முழுக்க சாக்லேட் கொண்டு தயாரிக்கப்பட்டது என்பதுதான். இரண்டு லட்சம் சாக்லேட்களைக் கொண்டு, நான்கு மாதம் உழைத்ததில், இருபது உடைகளைத்தான் தயாரிக்க முடிந்ததாம்...

— கௌதம்



கோவை
## ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்
வழங்கும்.

# தேசத்தின் குரல்!

காலை 8.30மணி
ஞாயிறு தோறும்

மகாத்மா காந்தி எப்படி பேசினார் ?

சுபாஷ் சந்திர போஸ் எப்படி உரையாற்றினார் ?

சுதந்திரம் வாங்கியவுடன் நேருவின் குரல் எப்படியிருந்தது?

சுதந்திரம் கொடுத்தவுடன் மவுண்ட் பேட்டன் குரல் எப்படியிருந்தது?

**தன்னிகரற்ற மறைந்த தேசத்தலைவர்களின்
பேச்சுக்களை, அவர்தம் குரலிலேயே
அப்படியே வானொலியில் கேட்க, பொன்னான வாய்ப்பு இது !**

தேசத்தின் குரல் !
வழங்குகிறார்கள் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்.

**ஒவ்வொரு ஞாயிறு அன்றும் காலை 8.30 மணிக்கு,
சென்னை, கோவை, திருச்சி, மதுரை,
வானொலி நிலையங்களில் கேட்டு மகிழுங்கள் !
தவறவிடக் கூடாத அரிய ... மிக அரிய.... வாய்ப்பு இது !**

கோவை
## ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்

இனிப்புக்கு மட்டுமல்ல, இனிமைக்கும் !

DIMENSIONS/SKS/02-03

# பொய்யில் பூத்த நிஜம்

சமேலியின் உதவியுடன் பரத்தை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லத் தயார் செய்யும்போது வெளியில் செல்லப் போகிறோம் என்கிற குஷியில் பரத் ஏகமாய்ச் சிரித்தான். நிறுத்தி வைத்து பவுடர் போடுவதற்குள் கால்கள் நிற்காமல் குதி போட்டன. உட்கார்த்தி தலை சீவும் போது தனது வாத்து நண்பர்களுக்குப் பவுடர் போட்டான். பரத்துக்கும் இன்று பரீட்சை என்று சகுந்தலா நினைத்துக்கொண்டாள். மேஜை மீதிருந்த ராஜாவின் புகைப் படத்தைக் காண்பித்து "இது யாரு?" என்றாள். பரத் பதில் சொல்லாமல் வாத்தை கவனித்தபோது கவலைப்பட்டாள். ''அப்பா'' சொல்லு ''அப்பா'' என்று ஊக்குவித்தாள். பதிலுக்கு அவன் "ப்பா" என்றபோது ''சமத்து'' என்று பாராட்டினாள்.

"ஸாப் என்னிக்கு வீட்டுக்கு வராங்க தீதி?" என்றாள் சமேலி.

"இன்னிக்கோ, நாளைக்கோ வரலாம்" என்றாள் சகுந்தலா சுரத்தில்லாமல். சமேலி அவளை யோசனையுடன் பார்த்தாள்.

"என்ன விஷயம் தீதி?"

சகுந்தலா திடுக்கிட்டு அவளைப் பார்த்தாள். சமேலி தலையைக் குனிந்து கொண்டு முணுமுணுத்தாள்.



"நீங்க ஏதோ கவலைப்படற மாதிரி இருக்கு. கவலைப் படாதீங்க. வீட்டுக்கு ஸாப் திரும்பிட்டார்னா எல்லாம் சரியாப் போயிடும்."

"அதான் நானும் நினைக்கிறேன் சமேலி" என்றாள் சகுந்தலா. இவளுக்கு விஷயத்தைச் சொல்வதா வேண்டாமா என்று யோசித்துவிட்டு இப்போது ஏதும் சொல்லத் தேவையில்லை என்று பேசாமல் இருந்தாள். சமேலி காட்டக் கூடிய பச்சாதாபம் ஒரு

# 18

சோர்வை ஏற்படுத்தும். இன்று நிச்சயம் அவளால் அதைத் தாங்க முடியாது. ராஜாவின் வருகையை முன்னிட்டு அவனுடைய சௌகர்யத்திற்காக முன்பே யோசித்திருந்தபடி மாற்றங்களைச் செய்வதில் சமேலி உற்சாகமாக ஈடுபட்டபோது அவள் தன் உணர்ச்சிகளை மறைத்துக்கொண்டு மேற்பார்வை பார்த்துச் சிலாகித்தாள்.

"உங்களோடு நானும் வரவா?" என்றாள் சமேலி, திடீரென்று முடிவுக்கு வந்தவள்போல, "முன்னாவைப் பார்த்துக்கலாம். சாப் திரும்பி வரும்போது சாமானை வண்டியிலே வைக்க உதவலாம்." எதிர்பாராமல் வந்த இந்த உதவி தேவையா என்று சகுந்தலா ஒரு விநாடி யோசித்தாள். பிறகு இவள் வருவது தனக்கு ஒரு வகையில் தெம்பை அளிக்கலாம் என்று தோன்றிற்று.

"அப்ப சீக்கிரம் வேலையை முடி" என்றாள்.

ஆஸ்பத்திரி போய்ச் சேரும் வரை சமேலி சின்னப் பெண்ணின் ஆர்வத்துடன் சளசளத்துக் கொண்டு, பரத்துடன் விளையாடிக் கொண்டு வந்தது ஆறுதலாக இருந்தது. உற்சாகத்தைக் கூட அளித்தது. வாழ்க்கை சகஜ நிலைக்குத் திரும்பி விட்டது போல்.



ஆஸ்பத்திரியை நெருங்கியதும் 'அம்மாடி அரண்மனை மாதிரி இருக்கு ஆஸ்பத்திரி' என்று சமேலி வாயைப் பிளந்தாள். பரத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு அவள் கூட நடக்க, நுழைவாயிலை அடைந்தபோது விவேக் அவளுக்காகக் காத்திருப்பது போல் நின்றிருந்தான். அவளைப் பார்த்ததும், "ஏன் இத்தனை நேரம் பண்ணினே?" என்றான்.

அவள் வியப்புடன் அவனைப் பார்த்தாள். அவன் கோபத்தில் இருப்பவன் போலத் தெரிந்தான். அவள் கடிகாரத்தைப் பார்த்தாள். பதினொன்று அடித்து பத்து நிமிஷம் ஆகியிருந்தது. சமேலியினால் பத்து நிமிஷம் லேட்.

"பதினோரு மணிக்கு தானே எப்பவும் வருவேன்? என்ன விஷயம்?" என்றாள் ஆங்கிலத்தில்.

அப்போதுதான் சமேலியைக் கவனித்தவனாக "ராஜா இங்கு இல்லை" என்றான் விவேக் ஆங்கிலத்தில்.

"வாட்?" என்றாள் சகுந்தலா திடுக்கிட்டு. பிறகு சமேலியைப் பார்த்து, "அதோ பார், அந்தப் புல்வெளியிலே நிழல்லே உட்கார்ந்து முன்னாவுக்கு விளையாட்டு காட்டு. அப்புறம் கூப்பிடறேன்" என்றாள்.

சமேலி "அச்சா ஜீ" என்று உற்சாகத்துடன் கிளம்பினாள்.

**வாஸந்தி**

அவள் செல்வதைச் சற்று நேரம் ஜடத்தனத்துடன் பார்த்துவிட்டு அவள் விவேக்கிடம் சோர்ந்த புன்னகையுடன் கேட்டாள்.

"இது என்ன பிரச்னை?"

"பிரச்னை இல்லை" என்று அவன் படபடத்தான்.

"திட்டமிட்ட மோசடி. அந்தக் கிழங்கள் இலேசுபட்டவங்க இல்லே."

அவனுடைய கோபம் அவளது அடிவயிற்றைக் கலக்கிற்று.

"விவேக், என்ன விஷயம் சொல்லு."

அவன் அவளது தோளை அணைத்து ஒதுக்குப்புறமாக அழைத்துச் சென்றான். "மிஸ்டர் சரவணன் இன்று காலை நா வர் றதுக்குள்ளே ஆஸ்பத்திரி பில் கட்டியிருந் தார். ராஜாவை டிஸ்சார்ஜ் பண்ணியிருந் தார்கள்."

"ஏன்? எப்படி?" என்றாள் சகுந்தலா. அதிர்ந்து.

"நீ தானே அட்மிட் பண்ணினே? ஆபீஸ் பேமெண்ட் பண்ணும்னியே?"

"இப்பவும் ஆபீஸ் பண்ணும். வவுச்சர் எல்லாம் எனக்குத்தான் சரவணன் அனுப் பப்போறார்."

"பின்னே எப்படி, உனக்குச் சொல்லா மலா நடந்திருக்கு?"

"ஆமாம். நாம ரெண்டு நாள் இங்க வராத தாலே டாக்டரோட ஏதோ பேசி முடிவு பண்ணியிருக்காங்க போலிருக்கு. பெட் காலி பண்ணணும்னு இங்கே கட்டாயப்படுத் தினாங்கங்கறார் சரவணன்."

"அதனாலே?" என்று சகுந்தலா பொறு மையிழந்து படபடத்தாள்.

"அதனாலே - பில்லை ராஜாவுடைய அப்பா என்கிற காரணத்தினாலே கட்டி விட்டு கெஸ்ட் ஹவுசுக்கு ராஜாவை அழைத் துக் கொண்டு போய்விட்டார்."

"கெஸ்ட் ஹவுசுக்கா? ஏன்? பார்! நா நேத்தே வரேன்னேன். நீ தடுத்தே!"

அவன் உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கினான்.

"ஆமாம், ஸாரி. தப்பு பண்ணிட்டேன்."

"நீ அவரைப் பார்க்கல்லே? ராஜாவைப் பார்க்கல்லே?"

"பார்த்தேன். ஆஸ்பத்திரிக்கு வந்த உடனேயே ஆபீஸ் ரூமுக்குப் போய் எப்ப டிஸ்சார்ஜ் பண்ணுவாங்க. பில் எத்தனை இருக்கும்னு விசாரிக்கப் போனேன். அந்த மனுஷன் பில்லைக் கட்டிட்டு வெளியிலே வரார். நீங்க ஏன் கட்டினீங்கன்னு கேக் கறேன். சத்தம் போடறார். 'இரண்டு நாளா உன்னைக் காணோம், இங்க டிஸ்சார்ஜ் பண்ணணும்னு நெருக்கறாங்க, பின்னே நா கட்டாம என்ன செய்யறதுங்களார்.' எனக்கு ஒரு ஃபோன் பண்ணியிருக்கலாமேன்னேன். அதுக்கும் கத்தறார் அந்த மனுஷன். நா ஏன் பண்ணணும்? உங்களுக்கெல்லாம் உண்மை யான அக்கறை இருந்தா விசாரிச்சிருக்க மாட்டீங்களாங்கறார். என் மகன் அநாதை யில்லே நல்ல வேளைங்கறார்!"

அவள் சிரித்தாள். "சகுந்தலா மாதிரி?"

"எக்ஸாட்லி! அந்த மனுஷன் பொல்லாதவன் சக்கு!"

"சரி விடு" என்றாள் சகுந்தலா சோர் வுடன்.

"எனக்கு அவரைப் பத்திக் கவலை யில்லே. ராஜாவைப் பாத்தியா? அவன் என்ன சொன்னான்?"

"பார்த்தேன்" என்றான் விவேக் நிராசை தொனிக்கும் குரலில்.

"அவனுக்கு நான் இப்ப வெளியான் சக்கு. மடையனுக்கு மூளையே குழம்பிப் போச்சு போலிருக்கு. அவன்கிட்ட நயமா, தர்க்க ரீதியா விளக்கிப் பார்த்தேன். நீ இங்கே வாழ றவன், உனக்கு ஒரு குடும்பம் இருக்கு, உன் வீட்டுக்கு நீ திரும்பணும்'னேன்." சரவணன் அங்கேயே நின்னு அவனைக் கன்ட்ரோல் செய்யறார். 'இப்ப ஆஸ்பத்திரியிலே எந்த சர்ச்சையும் வேண்டாம். இப்ப கெஸ்ட் ஹவுசுக்கு அழைச்சிட்டுப் போறோம். அங்க வந்து பேசுங்க'ங்கறார். அவனும் அதையே சொல்றான். அவர் கொஞ்சம் வெளியே போனபோது நா சொன்னேன். சகுந்தலா இப்ப குழந்தையோட உன்னைப் பார்க்க வருவா. கொஞ்சம் வெயிட் பண்ணுன்னேன். அவன் அதுக்குத் தயங்கி னான். கடைசியிலே, கெஸ்ட் ஹவுசுக்கு அழைச்சிட்டு வா பேசலாம்னான். சரின்னு சொல்றதைத் தவிர வேறே ஒண்ணும் என்னாலே செய்ய முடியல்லே.

"ஓ காட்!" என்றாள் அவள் உதட்டைக் கடித்து.



"மந்திரியாரே, வேட் டைக்கு வேண்டிய ஏற்பாடு கள் செய்துவிட்டீரா?"

"ஆம். மன்னா, நரிக்குற வர்களிடம் சொல்லி மான், முயல் போன்றவற்றைப் பிடித்துக் காட்டில் கட்டிப் போடச் சொல்லிவிட்டேன். நீங்கள் சென்று அம்பு எய்து கொல்ல வேண்டியது மட் டும்தான் பாக்கி!

- சகிதா முருகன்

"அதென்ன அது கெஸ்ட் ஹவுசுக்கு வா பேசிக்கறேன் என்கிறது. கோர்ட்டுக்கு வா பேசறேன்னு சொல்றமாதிரி? ஒரு மூணாந்தர த்ரில்லர் படத்து அப்பாவி கதாநாயகி மாதிரி எனக்கிருக்கு!"

"சரவணன் டைரக்ட் பண்றார். அதான் மோசம்!"

இரண்டு பேரும் சிரித்தார்கள்.

"சிரிப்புதான் வருது விவேக். என் வாழ்க்கை அத்தனை அபத்தமாயிடுச்சு. சரி, இப்ப கெஸ்ட் ஹவுசுக்குப் போவோம். அதை யும பாத்துரலாம். ராஜாவை அதுக்குள்ளே அவங்க சென்னைக்குக் கூடத்திட்டுப் போயி டாம இருந்தா."

"இனிமே சாயந்திரம்தான் ஃப்ளைட்" என்று அவன் புன்னகைத்தான்.

"சமேலியைக் கூப்பிடு. என் கார்லே அழைச்சிட்டுப் போறேன்."

**ம**காராணி பாகை நோக்கி விவேக் வண்டி ஓட்டுகையில் விவேக் எதுவும் பேச வில்லை. சமேலியும் ஏதோ பிரச்னை என்று புரிந்துகொண்டு நாகரிகமாக மௌனம் காத்தது அவளுக்கு ஆறுதலாக இருந்தது. அவள் கற்பனையில் எதிர்நோக்கும் காட்சி எதுவும் நடப்பதே இல்லை என்பது அவளுக்குப் பழக்கமாகிப் போன ஒன்று என்று நினைத்துக் கொண்டாள். அவள் ஜனிக்கும் தருணத்தில் கிரகங்கள் எல்லாம் கூட்டு சேர்ந்து அவளுக்கென்று பிரத்யேக மான பிரச்னைகள் முளைக்குமாறு சதி செய் திருக்க வேண்டும். பேச்சுப் போட்டிக்கு முந்தைய தினம் காய்ச்சல் வரும். நாட்டிய நிகழ்ச்சிக்குமுன் கால் ஒடியும், பரீட்சைத் தாளில் இரண்டு கேள்விகள் பார்வை யிலிருந்து மறையும். ரோஜா பூக்கும் நிமிஷத் தில் மாடு தின்று விட்டுப் போகும்.

"எனக்குன்னு ஏன் பாட்டி இப்படிப் பிரச்னைகள் வருது?" என்று ஒவ்வொரு கால கட்டத்திலும், பாட்டியைக் கேட்பாள்.

"ரொம்ப கெட்டிக்கார ஸ்டுடென்டைத் தான் வாத்தியார் கஷ்டமான கேள்வியைக் கேப்பார். அதுமாதிரி ரொம்பப் பிரியமான வாளுக்குதான் பகவான் அதிக சோதனை கொடுப்பார்" என்பாள் பாட்டி சுற்றி வளைத்து.

"அப்படிப் பிரியம் காட்டற பகவான் எனக்கு வேண்டாம் பாட்டி."

"உன்னை டெஸ்ட் பண்றார்டீ!"

"வேண்டாம். எனக்கு அந்தச் சோதனை. நா பலவீனமானவ."



"உங்க வீட்ல திருட்டுப் போன பொருள் எல்லாம் திரும்பக் கிடைச் சுடுச்சாமே... போலீசுல புகார் பண்ணி யிருந்தீங்களா?

ம்ஹூம்... ஏரியா தாதாகிட்ட புகார் பண்ணியிருந்தேன்!

– அம்பை தேவா

"நிமிர்ந்து நிக்கறியான்னு பார்க்கறார்." முடியாது செத்துருவேன்.

**வ**ண்டி நின்றது. மறுபடி அடிவயிற்றில் விவரம் புரியாத பீதி சுழன்றெழுந்து குரல் வளையை அழுக்கிற்று.

"சகுந்தலா இமோஷனலாயிடாதே" என்றான் விவேக் மெல்ல.

"தன்னை இமோஷனல் பிளாக் மெயில் பண்ண வந்ததா ராஜா நினைக்கக்கூடாது!"

"என்னாலே இயல்பாத்தான் இருக்க முடி யும் விவேக். எனக்கு நடிக்கத் தெரியாது. அது என்னுடைய பலவீனம்" என்றாள் அவள் ஆங்கிலத்தில்.

சமேலியைக் காரிலேயே இருக்கச் சொல்லிவிட்டு பரத்தைத் தூக்கிக் கொண்டு அவள் விவேக்குடன் நடந்தாள். மார்பின் படபடப்பை அடக்க முடியவில்லை என்பது பலவீனப்படுத்திற்று. அறையின் பெல்லை அழுத்திவிட்டு காத்திருந்த வேளையில் ஒரு யுகம் நகர்ந்தது.

கதவைத் திறந்து சரவணன் அவளையும் இடுப்பிலிருந்த குழந்தையையும் பார்த்து திகைத்து பிறகு சமாளித்துக்கொண்டு விவேக்கிடம் பொதுவாக "வாருங்கள்" என் றார்.

சோபாவில் ராஜா உட்கார்ந்திருந்தான். அவனருகில் கையில் ஒரு தம்ப்ளரை ஏந்திய படி நின்றிருந்த காமாட்சி குழந்தையைப் பார்த்து திகைத்தது முகத்தில் தெரிந்தது. சகுந்தலாவைக் கண்ட உடனேயே கடுமை பரவிற்று.

சகுந்தலாவுக்கு விநோதமாக ஏற்கனவே இந்தக் காட்சியில் தான் பாகமேற்றிருந்த தாகத் தோன்றிற்று. பல ஆயிரம் வருஷங் களுக்கு முன் புரு வம்சத்து சபையில், சூர்ய ஒளி போன்ற பாலகனைக் கையில்




**ரோ**ம் நகரில் ராமாயணத்தை. காவியமாகப் பாடிய வால்மீகி முனிவர் பெயரில் சாலை உள்ளது. 'இந்திய இதிகாசக் கவி' என்ற குறிப்புடன் 'வால்மீகி தெரு' என்ற பெயர்ப் பலகை உள்ளது. பெருமைப்பட வேண்டிய விஷயம்தானே?

- நவி மும்பை ராதாபாலு

ஏந்தியபடி.. "மகளே உன் தந்தைக்கு வணக்கம் சொல்" என்று அவள் சொன்னது நினைவுக்கு வந்தது. மன்னன் கோபத்தில் வார்த்தையைக் கக்கியது செவியில் இன்னும் ரீங்கரித்தது.

"உன்னையே எனக்குத் தெரியாது எனும்போது இந்தக் குழந்தை என்னுடையது என்று எந்தத் துணிச்சலில் சொல்கிறாய்? இதற்கு என்ன ஆதாரம் கேடுகெட்ட பெண்ணே?"

"நீ கொடுத்த வாக்கே ஆதாரம். நீ காக்க வேண்டிய தர்மமே ஆதாரம்."

"நான் உன்னை நம்ப மாட்டேன். பெண்கள் பொய்யர்கள். உன் பேச்சை யார் நம்புவார்கள்?" தாய் மேனகை, தந்தை விசுவாமித்ரர் என்கிறாய். இருவரும் காமுகர்கள். கருணையில்லாமல் உன்னைக் கடாசி விட்டுச் சென்றவர்கள். நீ ஒரு விலைமாதுவைப் போல எனக்குத் தோன்றுகிறாய்."

"அறிவு கெட்ட மன்னனே, கேள். நீ கடுகாய்ச் சிறுத்துப் போனாய். நான் மேரு மலையாய் நிற்கிறேன். வம்புப் பேச்சைக் கேட்கும் முட்டாள் அதில் தப்பை மட்டுமே எடுத்துக் கொள்வான். அறிவுள்ளவன் நல்லதை மட்டுமே கிரகித்துக் கொள்வான்.."

சகுந்தலா ராஜாவின் முகத்தை அசையாமல் பார்த்தாள்.

கண்களில் ஏதேனும் சலனம் இருக்கிறதா என்று அவள் ஆராய்ந்தாள். பரத்திடம் "அப்பாவைப் பாரு" என்றபோது எந்த யுகத்திலோ சொன்ன வார்த்தைகளில் மாற்றம் இல்லை என்று தோன்றிற்று. காமாட்சியின் குரல் எங்கோ கேட்டது.

"என்ன இப்ப? அவனைத் தொந்திரவு செய்ய வேண்டாம்னு சொல்லுங்க."

"ராஜாவுடைய சினேகிதங்க. பார்த்துப் பேசிட்டுப் போகட்டும். அதை நாம தடுக்கக்கூடாது" என்றார் சரவணன் கம்பீரமாக.

சகுந்தலாவின் ரத்த நாளங்களில் ஒரு சிலிர்ப்பு ஓடிற்று. ஓர் அசாதாரண அமைதி ஏற்பட்டது. சற்று முன்னால் அடி எடுத்து வைத்து ராஜாவைச் சுட்டிக்காட்டி, பரத்திடம் "அப்பாவைப் பாரு" என்றாள். பரத் ராஜாவைப் பார்த்துச் சிரித்தான். காலை எட்டி உதைத்துத் தாவினான். சகுந்தலா ராஜாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள் மகாபாரத காலத்து நினைவில். ராஜாவின் உடல் கூச்சத்துடன் பின்னுக்கு நகர்ந்தது. கண்களில் மிரட்சி தெரிந்தது. பல யுகத்துக் கோழைத்தனத்தின் பிரதிபலிப்பாகப் பட்டது. காமாட்சி அவசரமாக ராஜாவின் அருகில் வந்து நின்றாள். அவன் தோளைத் தொட்டாள்.

"என்னடா ராஜா, குழந்தையைத் தூக்கிட்டு வந்து மிரட்டப் பார்க்கிறாளா?" என்றாள்.

காமாட்சியின் வார்த்தைகளைப் புரிந்து கொண்டது போலவே சகுந்தலா காண்பித்துக் கொள்ளவில்லை. ராஜாவின் எதிரில் நிற்கும்போது மனத்தில் உணர்வலைகள் கட்டுக் கடங்காமல் பொங்கி மூச்சு முட்டிவிடும்போல் திணறிற்று. ராஜா தன் தாயைப் பார்த்துச் சொன்னான்.

"அம்மா நா இவங்களோடு கொஞ்சம் பேசணும்."

"நீ வா காமாட்சி, அவ்ங்க பேசட்டும்" என்றார் சரவணன். அவரும் காமாட்சியும் அறையை விட்டு வெளித் தாழ்வாரத்திற்குச் செல்வதற்கு முன் அவளுக்கு ஆங்கிலம்தான் தெரியும் என்று நினைத்தவர் போல, "நோ இமோஷனல் ஸீன்ஸ், ஓ.கே? அவனுடைய உடல் நிலையை நினைவு வைத்துக் கொள்" என்று விட்டுப் போனார். விவேக் சொன்னது போல இது ஏதோ திட்டமிட்ட செயல் என்று அவளுக்குத் தோன்றிற்று. அவள் விவேக்கைப் பார்த்துப் புன்னகைத்துவிட்டு ராஜாவின் பக்கம் திரும்பினாள்.

(தொடரும்)

# வெங்கையா போட்ட உத்தரவு!



"வாஜ்பாய், அத்வானி போன்ற தலைவர்கள் நெல்லூருக்கு வந்தால், மைக் வைத்துக்கொண்டு ஊர் முழுக்க பொதுக்கூட்டம் பற்றி அறிவிப்பு செய்வேன்; என் கையால், பொதுக்கூட்ட அறிவிப்பு எழுதாத சுவரே நெல்லூரில் கிடையாது. அப்படிப்பட்ட அடிமட்டத் தொண்டனாகப் பொது வாழ்க்கையை ஆரம்பித்த என்னை, பிரதமர் வாஜ்பாயே அழைத்து, கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்படி சொன்னபோது எனக்கு ஏற்பட்ட உணர்வு திரில், சந்தோஷம், பயம் என்று எல்லாம் கலந்தது. சாதாரண விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த எளிய நபர் ஒருவர், இந்திய நாட்டின் ஆளும் கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்பது என்பது சாதாரண விஷயமா?" என்று வியப்போடு கேட்கிறார் வெங்கையா நாயுடு.

கட்சித் தலைமைப் பொறுப்பை ஏற்றவுடன், வெங்கையா நாயுடு போட்ட முதல் உத்தரவு யாரும் தமது காலில் விழுந்து வணங்கக்கூடாது என்பதுதானாம். "காலில் விழுந்தால், ஆயுசு குறைந்துவிடும். நான் நீண்ட ஆயுளுடன் இருந்து, நாட்டுக்கும் குறிப்பாக கிராமங்களுக்கும் சேவை செய்ய விரும்புகிறேன்" என்கிறார் சிரித்தபடி.

"நான் அசோகா ரோடிலிருந்து (கட்சி அலுவலகம்) அசோகா ஹாலுக்குப் போனேன். (மத்திய மந்திரியாக பதவி ஏற்க ராஷ்டிரபதிபவனுக்கு) மறுபடி அசோகா ரோடுக்கு வந்திருக்கிறேன். கிராமப்புற வளர்ச்சி அமைச்சராக இருந்த இருபது மாத காலத்தில், இந்தியா முழுக்க சுற்றுப்பயணம் செய்தேன். இரண்டு லட்சம் கிராமங்களில் தண்ணீர் வசதியே இல்லை. எண்பதாயிரம் கிராமங்களுக்கு மின்சார வசதி இல்லை. இவற்றையெல்லாம் பார்க்கிறபோது எனக்குத் தோன்றுவது இதுதான்: இந்தியா நகர்வது ஃபார்வர்ட்; பாரதம் இருப்பது பேக்வர்ட். இது நமக்கு ரொம்ப ஆக்வர்ட்!" - கவலையிலும் வார்த்தைகளுடன் விளையாடினார்!

கூட்டுக்குடும்பம் என்றால், பலவித பிரச்னைகள் இருக்கும். அதுபோலவே கூட்டணி ஆட்சியிலும் கருத்து வேறுபாடுகள் இருக்கவே செய்யும். ஆனாலும், அவற்றையெல்லாம் மீறி, அரசு நன்றாகச் செயல்பட்டு, நல்லாட்சி வழங்க வேண்டும். எங்களது சாதனைகளை மக்களிடம் எடுத்துச் சொல்லியே அடுத்த தேர்தலில் மக்களைச் சந்திக்க விரும்புகிறோம். அதற்கு முன், நாங்கள் சாதிக்க வேண்டியவை ஏராளம் என்பதை வெளிப்படையாக ஒப்புக்கொள்கிறேன்" என்கிற வெங்கையா நாயுடுவிடம், "பா.ஜ.க-ஜெ இரு தரப்பினரது நடவடிக்கைகளையும் கூர்ந்து பார்த்தால் கூட்டணி மாற்றம் ஏற்படும் போலத் தோன்றுகிறதே?" என்றால்

"தேர்தலுக்கு இன்னும் நிறைய காலம் இருக்கிறது. தேர்தல் கூட்டணி பற்றி இப்போது பேச வேண்டிய அவசியமே இல்லை!" என்று பதில் வருகிறது.

— எஸ். சந்திரமௌலி

படம்: யோகா

நேற்றுதான் நடந்தது போலிருக்கிறது. பாகிஸ்தானிலிருந்து பங்களா தேஷ் பிரிந்ததைச் சொல்கிறோம். இந்தியாவுக்கும் அதிலிருந்து பிரிந்த பாகிஸ்தானுக்கும் உள்ள பகைமைக்குச் சற்றும் குறைந்ததல்ல பாகிஸ்தானுக்கும் அதிலிருந்து பிரிந்த பங்களாதேஷுக்கும் இடையே உள்ள பகைமை.

ஆனால் இன்று? பாகிஸ்தான் அதிபர் முஷாரப் பங்களாதேஷுக்கு விஜயம் செய்கிறார். அதாவது தனி நாடாக பங்களாதேஷ் உருவான முப்பது வருடங்களில் முதல் முறையாக பாகிஸ்தான் தலைவர் ஒருவர் அந்த நாட்டுக்குச் சென்றிருக்கிறார்.

எதற்காக இந்த விஜயம் என்ற கேள்வி இயல்பானதுதான்.

ஒரு வேளை முஷாரப்புக்கு தாம் ஒரு ராணுவத் தலைவர் மட்டுமல்ல. நாட்டின் தலைவரும்கூட என்பதற்கான அங்கீகாரம் தேவைப்படுகிறதோ? சக முஸ்லீம் நாடு ஒன்றும் தம்மைப் பாகிஸ்தானின் பிரதிநிதி என்று அரசியல்பூர்வமாக ஏற்றுக் கொள்வது நல்லது என்று விரும்புகிறாரோ? இந்த அங்கீகாரத்தை அவருக்குத் தர பங்களாதேஷ் தயாராகிறதோ? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடையாக பங்களாதேஷின் வெளியுறவு அமைச்சர் மொர்ஷெட் கான்: "எந்த ஒரு

# நம்ம தலைவ உருவாமா



சர்வாதிகாரிக்கும் அரசியல் அங்கீகாரம் கொடுப்பது எங்கள் நோக்கமல்ல. அதைப் பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரம் என்றே நாங்கள் கருதுகிறோம்" எனக் கூறியிருக்கிறார்.

சமீபத்தில் காட்மண்டுவில் நடைபெற்ற சார்க் மாநாட்டில் கலந்து கொண்ட அத்தனை நாடுகளின் தலைவர்களுக்கும் பகிரங்க அழைப்பு விடுத்தார் பங்களாதேஷ் பிரதமரான

கலிதா ஜியா. இதை ஏற்றுத்தான் பங்களாதேஷ் செல்ல முடிவெடுத்தார் முஷாரப்.

இந்தோ - பாக் உறவுகள் இன்று இருக்கிற நிலைமையில், முஷாரப்பின் எந்தச் செயலையும் இயல்பானது என்று ஒதுக்க முடியவில்லை. எனவே அவர் டாக்கா செல்வதில் இந்தியாவுக்கு ஏதேனும் பாதிப்பு இருக்குமா? இந்தியாவுக்கெதிராக பங்களாதேஷை திசைத்திருப்ப மதம் என்ற ஆயுதத்தை முஷாரப் பயன்படுத்துகிறாரா?

இந்தியாவின் மீது பங்களாதேஷுக்குச் சில கசப்புணர்வுகள் (முஷாரப்பின் திருவிளையாடல் எதுவும் நிகழும் முன்பே) இருக்கின்றன என்பதே உண்மை. மீண்டும் பங்களாதேஷை இணைத்துக் கொண்டு அகண்ட பாரதமாக தன்னை விரிவுபடுத்திக் கொள்ளும் எண்ணம் இந்தியாவுக்கு இருக்கிறது என்று அந்த நாட்டின் உள்துறை அமைச்சர் சில மாதங்களுக்குமுன் குறிப்பிட்டிருக்கிறார்!



• கலிதா ஜியா

டாக்காவுக்கும் அகர்தாலாவுக்கும் பஸ் தடம், கொல்கத்தாவுக்கும் பேனபோலுக்குமிடையே பாசஞ்சர் ரயில்தடம் ஆகியவை நடைமுறைப்படுத்தப்படும் என்று கொஞ்சகாலத்துக்கு முன்பு இரு தரப்பிலும் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். ஆனால் இன்னமும் அவை நடைமுறைக்கு வந்தபாடில்லை.

இன்றைய தேதியில் பங்களாதேஷுடன் நிறைய வணிகம் செய்து வருகிறது இந்தியா. ஆனால் இதிலேயே அந்நாட்டுத் தலைவர்கள் சிலருக்கு அச்சம்.

"நம்மைப் பொருளாதாரத்தில் தொடர்ந்து அடிமையாக வைத்திருக்க இந்தியா விரும்புகிறது" என்றெல்லாம் பிரசாரம் செய்கிறார்கள். தங்களுக்குப் பல வணிகச் சலுகைகளை இந்தியா அளிக்க வேண்டும் என்றும் எதிர்பார்க்கிறது பங்களாதேஷ்.

இதற்கு நடுவே, தீவிர மதவாதிகளை ஓரளவாவது கட்டுக்குள் வைத்துக் கொள்வது எப்படி என்ற வித்தையை முஷாரப்பிடமிருந்து கலிதா ஜியா கற்றுக் கொள்ள விரும்புவார் என்கிறார்கள் சில அரசியல் விமர்சகர்கள்.

ஐ.எஸ்.ஐ. வலைப்பின்னலை டாக்காவுக்கும் பரவவைக்க முஷாரப் செய்யும் முயற்சியின் ஒரு பகுதியே அவரது பங்களாதேஷ் விஜயம் என்பவர்களும் உண்டு! கூடவே தமது நாடுகளுக்கு நடுவே இருக்கும் நம்மைப் பற்றிப் பேசாமலா இருந்திருப்பார்கள்?

— குல்லூ

'சின்ன பாப்பா... பெரிய பாப்பா' என்ற நகைச்சுவை (!) தொடரில், இதுவரை, சின்ன பாப்பாவாக நடித்து வந்த பழம் பெரும் நடிகை ஸ்ரீப்ரியா விலகிக் கொண்டு விட்டார். அவருக்குப் பதிலாக நடிக்க ஒரு மெகா மாமியாரைத் தேடிக்கொண்டிருந்த இயக்குநர் கண்ணில் கிட்டத்தட்ட அதே சைஸில் இருந்த அந்த நடிகை படவும், சட்டு புட்டென்று அட்வான்ஸ் கொடுத்து அக்ரிமெண்ட்டும் போட்டுவிட்டார். எனவே, இனிமேல் சின்ன பாப்பாவாக கலக்க வருகிறார், கல்பனா! யூ ஆர் ரைட்! ஊர்வசியின் அக்காவேதான். வெல்கம் சேச்சி!

ஓவியர் மருது, டி.வியிலும் படு பிஸி. அவரும் அவரது ஓவியக் குழுவும் சேர்ந்து தொலைக்காட்சி மெகா தொடர்களுக்கு ட்ரெய்லர், டைட்டில், கிராஃபிக்ஸ் போன்ற விஷயங்களைச் செய்துகொடுத்து, கலக்கிக் கொண்டிருக்கிறார்கள். சமீபத்து பங்களிப்பு, இந்துமதியின் 'நீ, நான், அவள்'.

பசியில்லை. சரியான தூக்கமில்லை. ஒரு மாதமாக உல்லாசத் திளைப்பில் இருக்கிறாராம் தீபா வெங்கட். ஆன்லைன் லாட்டரியில் ஏதாவது கோடி ரூபாய்... பரிசு... கிரிசு... அதெல்லாம் இல்லை. 'பாபா' படத்தில் நடித்து விட்டாராம்!

"நான் சூப்பர் ஸ்டாரின் விசிறி. சாதா விசிறிகூட இல்லை. விஷிலடிச்சான் விசிறி... அவருடைய படத்தில் ஒரு காட்சியிலாவது நடித்து விட மாட்டோமா என்று ஏங்கிக் கொண்டிருந்தேன். அப்பாடா! என் ஆசை நிறைவேறியது" என்றார் தீபா நெஞ்சில் கை வைத்து மலர



# பொன்மகள் வந்தாள்!

மலர சிரித்தபடி.

அமிதாப், கோவிந்தா, அனுபம் கேர், மனீஷா கொய்ராலா... விரித்த பாதையில் 'பொன்மகள் வந்தாள்... பொருள் கோடி தந் தாள்' என்று பாடிக்கொண்டே நடக்கவிருக் கிறார் கொல்கத்தா கலைமான் ராணி முகர்ஜி. 'கோன் பனேகா குரோர்பதி' ஸ்டை லில் இன்னுமொரு கேம் ஷோவை சோனி டி.வி தயாரிக்கவிருகிறதாம். புதுமையான விளையாட்டுகள், கவர்ச்சிகரமான புதிர்கள், வசிகரமான பரிசுகள் என புகுந்து விளை யாட ராணி முகர்ஜி ரெடி! மெய் மறந்து தரிசிக்க நீங்க ரெடியா?

அனுராதா ரமணன் எழுத்தில் உருவான 'ஜனனி' மெகா தொடர்



ஈநாடு டி.வியில் சக்கை போடு போடவே, தெலுங்குத் தொடர்களுக்கும் கதை எழுதிக் குவித்துக்கொண்டிருக்கிறார். 'இல்லாலு' (இல்லத்தரசி) என்ற நீ...நீ...ண்ட தொடருக்கு, திரைக்கதையும் அமைத்துத் தந்திருக் கிறாராம். எந்த ஊர் எழுத்தாளராக இருந் தால் என்ன..? சுந்தரத் தெலுங்குப் பெண்கள் கர்ச்சீப்பும் கையுமாக ஆதரவு தராமலா போய்விடுவார்கள்!

கூட்டம் கூட்டமாக நட்சத்திரங்கள்... கூடிக் கூடி வசன மழை பொழிவார்கள். நட்ட நாயகமாக நாரதர் வேலை செய்து, நல்லபடியே பிரச்னைகளைத் தீர்த்து வைப் பார்.... நாடக வாடை அடித்தாலும், நாகரிகமான நகைச்சுவை இருக்கும்...

விசுவின் படத்தைப் பற்றி இப்படியெல் லாம் பொத்தாம்பொதுவான எண்ணம் உங்களிடமும் இருக்கிறதா? தயவு செய்து மாற்றிக் கொள்ளுங்கள்.

ஜெயா டி.வியில் விசு பிரதான பாத் திரமேற்று நடிக்கவிருக்கும் 'நாலாவது முடிச்சு' மெகா தொடரில், வித்தியாசமான விசுவைப் பார்க்கலாம் என கற்பூரம் அணைத்து சத்தியமே செய்கிறார்கள்.

கிட்டே வாங்க.. காதோரம் ஒரு கிசுகிசு..!

வளமாக இருந்த அந்த மூன்றெழுத்து வாரிசு நடிகருக்கு, சமீபகாலமாக மார்க்கெட் டல்லோ டல்! சொந்த சினிமா கம்பெனி யிருந்தும் எந்தப் படமும் தயாரிக்கவில்லை. டி.வி தொடர்கள் தயாரித்தால், நாலு காசு பார்க்கலாமே என்று யாரோ ஐடியா தரவே, டி.வி கதை, டிஸ்கஷன் நடந்து கொண்டிருக் கிறது வெகு ஜரூராக!

கடைசியில் கிராமத்துக் கதைக்கு வோட்டு விழும் போலிருக்கிறது! சூரக் கோட்டை சிங்கக் குட்டியாச்சே!

— சானல் சாப்ளின்

# சுவடுகள் 31

ஐராவதம் மகாதேவன் சிந்தனையில் உதித்து, அவரது அன்பான பராமரிப்பில் வளர்ந்த பத்திரிகைக் குழந்தை தமிழ்மணி. தினமணி இணைப்பாக வெளிவந்த அதன் பெயரே காரணப் பெயர்தான். (தமிழ்மணி நிறுத்தப்பட்டு அந்த வார இதழ் வரா இதழாக ஆனபோது நான் அடைந்த வருத்தத்திற்கு அளவே இல்லை.)

அது நவீன இலக்கியக் கட்டுரைகளையும் பழந்தமிழ் இலக்கியம் தொடர்பான ஆய்வுகளையும் வெளியிட்டது. தமிழண்ணல், முத்துக் கண்ணப்பர் போன்ற அறிஞர்கள் தங்களின் கட்டுரைகளால் அதற்கு வளம் சேர்த்தார்கள். தொல்லியல், ஓவியம் சிற்பம் போன்ற நுண்கலைகள் என அது தொடாத துறையே இல்லை. நுண்கலை விமர்சகர் இந்திரனின் பல குறிப்பிடத்தக்க படைப்புகள் அதில்தான் வந்தன.

தமிழ்மணியின் பொறுப்பில் என் நண்பர் காலஞ்சென்ற தேவகி குருநாத் முதலில் கொஞ்ச காலம் நியமிக்கப்பட்டார். பின் அப்பணி எனக்கு வழங்கப்பட்டது. உயர்நிலைத் தமிழறிஞரான ஐராவதம் மகாதேவனின் நேரடிப் பார்வையில் பணிபுரியவும் பயிற்சி பெறவும் கிடைத்த சந்தர்ப்பம் என் வாழ்வில் நான் பெற்ற பேறு.

தமிழ்மணியின் சேவைகள் பல. என்றாலும் அதன் முக்கியமான சேவை புத்தக விமர்சனங்களே. விமர்சனத்திற்குப் புத்தகங்களைத் தேர்வு செய்வதிலும் எந்தப் புத்தகத்தை எந்த விமர்சகருக்கு அனுப்ப வேண்டும் என முடிவு செய்வதிலும் பின்பற்றப்பட்ட நெறிகள் போற்றத்தக்கவை. நடுநிலை விமர்சகர்கள் அதன் விமர்சனப் பக்கங்களைத் தங்கள் துலாக்கோல் எழுத்துகளால் மேம்படுத்தி வந்தார்கள். நானும் பல புத்தகங்களுக்கு விமர்சனங்கள் எழுதினேன். பழைய இலக்கியம், நவீன இலக்கியம், ஆன்மிகம் ஆகிய மூன்று துறைகளே என் ஆர்வங்கள்.

ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் சரித்திரம் என்ற நூலுக்கு விமர்சனம் எழுதினேன். விமர்சனத்திற்கு அப்பாற்பட்ட மகான் அவர். நூலில் பெரும் பகுதி அவர் சரிதம். மறுபகுதி அவர் நிகழ்த்திய அற்புதங்கள். வேட்டியிலிருந்து ஒரு நூலைப் பிரித்துப் போட்டு ஏராளமான பறவைகளை அவர் வரவழைப்பதும் இன்னொரு நூலைப் பிரித்துப்போட அவையெல்லாம் காட்சியிலிருந்து மறைவதும் போன்று அவர் நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் பல அற்புதங்கள் நூலில் குறிப்பிடப்பட்டிருந்தன. 'இந்த அற்புதங்களை நீக்கிவிட்டுப் பார்த்தால்கூட நூல் ஓர் அற்புதமான புத்தகம்தான்' என்பதாக என் விமர்சனத்தில் ஒரு வரி எழுதியிருந்தேன். 'எதற்காக அற்புதங்களை நீக்கிவிட்டுப் பார்க்க வேண்டும்? அவர் நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் அற்புதங்கள் எல்லாம் நிகழ்ந்தவைதான். சேஷாத்ரி பரப்பிரும்மத்தின் வரலாறு அவற்றையும் உள்ளடக்கியதுதானே?' என்று எழுதப்பட்ட ஒரு கார்ட் அலுவலகத்திற்கு வந்து சேர்ந்தது. கார்டை எழுதியவர் ரா.கணபதி.

பொதுவாகச் சித்தர்கள் நிகழ்த்துவதாகச் சொல்லப்படும் அற்புதங்களைப் பற்றி எனக்குச் சந்தேகங்கள் இருந்த காலம் அது. தி. ஜானகிராமன் சித்த புருஷர்களைத் தேடித் தேடிச் சென்றவர். (மோகமுள் நாவலில் இரும்பு ஆணி தங்க ஆணியாக மாற்றப்பட்டதாக ஒரு தகவல் வரும். 'அது கற்பனையல்ல, நடந்ததுதான்' என்று தி.ஜா. என்னிடம் சொன்னதுண்டு.) பேராசிரியர்

ந. சஞ்சீவியும் சித்தர்களைத் தேடிச் சென்று கொண்டிருந்தவர். என் ஆத்மார்த்தமான நண்பராக இருந்த தருமூ சிவராமு பற்பல சித்தர்களோடு பரிச்சயம் கொண்டிருந்தவர். க.நா.சு. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள் என்று தினமணி கதிரில் ஒரு தொடர் எழுதினார். அந்த வரிசையில் ஷீர்டி சாயிபாபா பற்றி எழுதும்போது அவர் நிகழ்த்திய சில அற்புதங்கள் பற்றிக் குறிப்பிட்டிருந்தார். 'அந்த மகானின் உன்னதமான வாழ்க்கை பற்றி எழுதினால் போதாதா? நீங்கள் குறிப்பிட்டுள்ள அற்புதங்களுக்கெல்லாம் என்ன ஆதாரம்?' என்று க.நா.சு.விடமே கேட்டேன். 'போண்டா பார்சல் சுற்றிவந்த நூலை அவிழ்த்து இரண்டு தென்னை மரங்களின் இடையே கட்டிவிட்டு, அந்த நூலில் படுத்துக் கொண்டு பாபா தூங்கியதைப் பார்த்திருப்பதாக நான் நம்புகிற ஒரு நீதிபதி என்னிடம் சொன்னார். அந்த நீதிபதி மூளைக் கோளாறு உள்ளவர் அல்ல' என்று பதில் சொன்னார் க.நா.சு.

எதையும் நிகழ்த்தவல்ல சித்த புருஷர்கள்

# மதிப்புரைகள்...

• இந்திரன்

• டி.எஸ். பார்த்தசாரதி

• தமிழண்ணல்

• தி. முத்து கண்ணப்பர்

• ரா. கணபதி

திருப்பூர் கிருஷ்ணன்

தொன்றுதொட்டு இருக்கிறார்கள் என்பது பலரின் நம்பிக்கை. (அணிமா, மகிமா எனச் சித்திகள் எட்டு வகை என்று சொல்லப்படு கிறது. ஆஞ்சநேயருக்கு இருந்த அணிமா சித்தி பற்றிச் சொல்லும்போது 'சோவெனப் பெய்யும் பெருமழையின் இடையே மழைநீர் தன்மேல் ஒரு சிறிதும் படாதவாறு மிக மெல்லிய உருவம் எடுத்து நடக்கும் ஆற்றல் உள்ளவன் அனுமன்' எனக் கம்பராமாயண

உரையில் எழுதுகிறார் வை.மு.கோ.)

ரா. கணபதியின் கார்ட் அன்று என்னைச் சிந்தனையில் ஆழ்த்தியது. காலப் போக்கில் நானும் ரா. கணபதி கருத் தோட்டத்துக்கு வந்து சேர்ந்தேன். என் சொந்த வாழ்க்கை அனுபவங்களும் முக்தானந்த பரமஹம்சர் எழுதிய சித் சக்தி விலாஸ், பரமஹம்ச யோகானந்தர் எழுதிய ஒரு யோகியின் சுயசரிதம், அ.ச. ஞான சம்பந்தன் எழுதிய அருளாளர்கள் போன்ற நூல்களும் முக்கியமாகக் காஞ்சிப் பரமாச்சாரியாரின் நேரடி ஆசிகளும் என் மனப்போக்கை வெகுவாக மாற்றிவிட்டன. ஒரு காலத்தில் நாத்திகச் சிந்தனைகளும் என்னிடம் இருந்தன என்பதை இன்று நினைத்தால் ஆச்சரியமாக இருக்கிறது. கண்ணதாசன் வரிகளில் சொல்வதானால், 'ஒருவன் நாத்திகனாக இருப்பதும் இறை வனின் சித்தமல்லாமல் வேறென்ன?' நாத்திகச் சிந்தனைகளுக்கு முரண் பட்டும் பொதுவுடைமைச் சிந்தனை களுக்கு உடன்பட்டும் ஆனால் ஆன்மிகத்தையும் காந்தியத்தை யும் உள்ளிட்டும் என் மனப் போக்கு மாறி வந்திருக்கிறது.

## பாயசமும் விஸ்கியும்!

சமீபத்தில் கே டீ.வி.யில் பிரபல கர் நாடக இசைப் பாடகி சௌம்யா அவர்களின் பேட்டியை ஒளி பரப்பினார் கள். அழகான இல்லச் சூழல்; புத்திசாலித்தனமான கேள்வி கள்; 'பளிச்' பதில்கள் - இப்படி நிகழ்ச்சி போய்க் கொண்டிருக் கும்போது சட்டென்று வெட்டி னார்கள். ஒரே ஓலமாக 'பாப்' பாடல் காட்சியை ஒளி பரப்பினார் கள். தலைவிரிகோல இளைஞர் களும், மேலும் கீழும் கையளவு ஆடை (!) மட்டுமே அணிந்த இளம் பெண்களும், நடனம் என்ற பெயரில் ஆபாசத் தைக் கடை விரித்தார்கள். 'பாப் நேரம்' என்று 'செரு கல்' டைட்டில் போட்டார்கள். ஒரு 'பாப்' ஆனவுடன் மீண்டும் சௌம்யாவின் பேட்டி. இப்படி நிகழ்ச்சி தொடர்ந்தது. பால் பாயசத்தை ருசித்துக் கொண்டிருக்கும்போது, விஸ்கியை ஊற்றி வீணடித்தது போன்ற உணர்வு ஏற்பட்டது. இந்தக் கொடுமையை கே டீ.வி. இனியாவது தொடராமல் இருக்கு மானால் நல்லது!

— எஸ்.வரதராஜன்



தமிழ்மணிக்கு இசைத் தமிழ் குறித்த ஆய்வு நூல் ஒன்று விமர்சனத்துக்கு வந்தது. நூலாசிரியைப் பாடல்கள் பாடி இலக்கியச் சொற்பொழிவுகள் செய்யும் தமிழ்ப் பேராசிரியை. தகுதி, புகழ் இரண்டும் உடையவர். நூல் டி.எஸ். பார்த்த சாரதிக்கு விமர்சனத்துக்கு அனுப்பப்பட்டது. நூல் முகப்பில் ஒரு கவிதை எழுதி யிருந்தார் ஆசிரியை. பழந் தமிழ் நடையில் அமைந்த சிறந்த கவிதை. கீழே எழுதியவர் பெயர் என அவர் பெயரும் வெளியிடப்பட்டிருந்தது. டி.எஸ். பார்த்தசாரதி அந்தக் கவிதையின் சிறப்பைப் பாராட்டி விட்டு, 'இந்த நூற்றாண்டில் எழுதப்பட்ட அந்த உயர் தரக் கவிதையைச் சில நூற்றாண்டுகள் முன் னரே பழங்கல்வெட்டு ஒன்றில் காப்பியடித் துப் பொறித்திருப்பதுதான் வருந்தத் தக்கது!' என்று குறிப்பிட்டிருந்தார்! தன் அனுமதி யைக் கோராமல் அச்சகத்தார் தன் பெய ரைக் கவிதையின் கீழ் வெளியிட்டு விட்ட தாக நூலாசிரியை எழுதிய திருப்தி தராத விளக்கமும் பிறகு வெளியிடப்பட்டது!

(தொடரும்)

ஈவ் டீசிங்கில் பலியான மாணவி சரிகா ஷாவின் நினைவு தினம் ஜூலை 25. இருபாலர் பயிலும் திருச்சி ஈ.வெ.ரா கல்லூரியில் அந்த தினத்தை, இந்திய மாணவர் சங்கத்தினர் வன்முறை எதிர்ப்பு தினமாக அனுஷ்டிக்க ஏற்பாடுகள் செய்திருந்தனர். அதற்கு முதல் நாளே அப்படி ஒரு ராகிங் கொடூரம் அரங்கேறும் என யாரும் எதிர்பார்க்கவில்லை.

# கொலையில் முடிந்த ராகிங்!





• பெரியார் கல்லூரி


• அழகர்சாமி

கல்லூரியின் முதலாமாண்டு வகுப்புகள் ஜூலை 24 அன்று துவங்கின. முதலாமாண்டு வரலாறு மாணவர் ரமேஷ் முதன் முதலாக வகுப்பறைக்குள் சென்றிருக்கிறார். முன்னரே வந்திருந்த மாணவிகளில் சிலர் வாடிய முகத்துடனும், கலங்கிய விழிகளுடனும் அமர்ந்திருந்தனர். ரமேஷுக்கு ஒன்றும் புரியவில்லை. அப்போது வகுப்புக்குள் திடீரென புகுந்த மூன்றாமாண்டு மாணவர்கள் ரமேஷை நோக்கி வந்துள்ளனர்.

ரமேஷை அவர்களது பாணியில் கீழ்த்தரமாக ராகிங் செய்துள்ளனர். ரமேஷினால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. "என்னை ஏன் தொந்திரவு செய்கிறீர்கள்? இதே கல்லூரியில்தான் என் அண்ணனும் படிக்கிறார்!" எனச் சொல்லவே, "எவன்டா உன் அண்ணன்?" என மிரட்டியிருக்கிறார்கள்.

"வணிகவியல் மூன்றாமாண்டு அழகர்சாமிதான்!" எனச் சொல்லியிருக்கிறார் ரமேஷ்.

'அழகர்சாமி' பெயரைக் கேட்டதும் முன்பைவிட கோபம் கொண்டிருக்கிறது ராகிங் கும்பல். ராகிங் கும்பலில் முன்னிலை



வகித்த மூன்றாமாண்டு மாணவர்களான ஆறுமுகம், பிரதீப், செல்வகுமார், ஆனந்த் ஆகியோருக்கும் அழகர்சாமிக்கும் கடந்த இரண்டு ஆண்டுகளாகவே முன் விரோதம் இருந்து வந்துள்ளது. காரணம் கல்லூரி மாணவர் மன்றச் செயலர் தேர்தல். அழகர்சாமியை எதிர்த்துப் போட்டியிட்ட செல்வகுமார், செயலராக வெற்றி பெற்றிருக்கிறார். அப்போதிருந்தே கல்லூரி வளாகத்திற்குள் இரு பெரும் கோஷ்டிகளாகப் பிரிந்து நின்று செயல்பட்டு வந்துள்ளனர்.

வகுப்பறைக்குள் நடந்த கலாட்டா குறித்து ரமேஷ் அழகர்சாமியிடம் சென்று முறையிட்டிருக்கிறார். ராகிங் கும்பலிடம் வந்து அழகர்சாமி விவரம் கேட்க, கல்லூரி வளாகத்தின் உள்ளே வாக்குவாதம் ஏற்பட்டிருக்கிறது. கல்லூரி ஆசிரியர்கள் தலையிட்டு சமாதானம் செய்து அனுப்பியுள்ளனர். அதன்பிறகும் புகைச்சல் அடங்கவில்லை. அப்பொழுதே ராகிங் கும்பல் கல்லூரியை விட்டு வெளியே சென்றுள்ளது.

ஆறுமுகம், பிரதீப், செல்வகுமார், ஆனந்த் ஆகிய நால்வரும் காஜாமலைப் பகுதியில் இருக்கும் கூலிப் படையினரிடம் பேசி வைத்து அவர்களை அழைத்து வந்து கல்லூரி வாசலில் நிற்க வைத்துள்ளனர். மதிய உணவு இடைவேளையின்போது உள்ளே சென்ற ஆறுமுகம், நேராக அழகர்சாமியிடம் சென்று "வெளியே வா; சமாதானம் பேசிக் கொள்ளலாம்!" என அழைத்துள்ளார். அழகர்சாமியும் யதார்த்தமாக கல்லூரி வாசலை விட்டு வெளியே வர, நால்வரும் அழகர்சாமியை, கூலிப்படைத் தலைவன் சுரேஷிடம் அடையாளம் காட்டியுள்ளனர்.

மாணவர்களுடன் கலந்து நின்றிருந்த கூலிப்படைத் தலைவன் சுரேஷ், அழகர்சாமியின் நெஞ்சில் கத்தியால் குத்திவிட்டு தனது கூட்டாளிகளுடன் தப்பித்து ஓட, ரத்த வெள்ளத்தில் அழகர்சாமி! மருத்துவமனைக்கு கொண்டு செல்லும் வழியில் இருபதே வயது ஆன அந்தக் கல்லூரி மாணவரின் உயிர் பிரிந்து விட்டது.

புதுக்கோட்டை மாவட்டம், களமாவூர் தவளைமேடு பகுதியைச் சேர்ந்தவர் துரை. காண்ட்ராக்டர். அவரது ஒரே மகன் அழகர்சாமி. மூன்றாமாண்டு வணிகவியல் மாணவர். அவரது சித்தப்பா மகன் ரமேஷ்தான் கல்லூரியில் ராகிங் கொடுமைக்கு உட்படுத்தப்பட்டவர்.

கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கல்லூரி மாணவர் மன்ற செயலர் பதவிக்கு தி.மு.க சார்பில் போட்டியிட்டவர் அழகர்சாமி. பா.ம.க சார்பில் போட்டியிட்டு வென்றவர் செல்வகுமார் என்பவர். பா.ம.க பிரமுகரான காடுவெட்டி குருவின் உறவினர். வெற்றி தோல்விக்குப் பின்னர் இரு தரப்பும் கடந்த இரண்டு ஆண்டுகளாகவே நேர்முக - மறைமுக மோதல்களில் ஈடுபட்டு வந்துள்ளனவாம்.

காஜாமலைப் பகுதி கூலிப் படைத் தலைவன் சுரேஷ் என்பவனிடம் அழகர்சாமி பற்றி பலமுறை செல்வகுமார் குருப் குறை கூறி வந்துள்ளது. அவர்களுக்குள் பல மாதங்களாக நீடித்து வந்த வன்மம், இந்த ராகிங் சம்பவத்துடன் இணைந்து அழகர்சாமியின் கொலை வரை சென்றுவிட்டது!

இக் கொலையில் நேரடியாக ஈடுபட்ட கூலிப்படைத் தலைவன் சுரேஷ் மற்றும் கூட்டாளிகளான பிரதாப், இப்ராகிம் ஆகியோரும், மாணவர்கள் தரப்பில் ஆறுமுகம்,

பிரதீப், ஆனந்த் ஆகிய ஆறு நபர்களும் காவல்துறையினரால் கைது செய்யப்பட்டுள்ளனர். பா.ம.க பிரமுகரின் உறவினரான மாணவர் செல்வகுமார் மட்டும் இன்னும் போலீஸ் வலையில் சிக்கவில்லை.

இதற்கிடையில் தமிழக அரசு, கல்லூரி முதல்வரை சஸ்பெண்ட் செய்துள்ளது. அவர் முதல்வராகப் பொறுப்பேற்று ஒரு மாதம் ஆகிறது. கல்லூரி ஆசிரியர் தரப்பும், மாணவர் தரப்பும் தமிழக அரசின் கல்லூரி முதல்வர் சஸ்பெண்ட் உத்தரவை வாபஸ் பெற வேண்டுமெனக் கோரி வருகின்றனர்.

முன்னாள் துணைவேந்தர் உட்பட மூவர் கொண்ட விசாரணைக் குழு ஒன்று தமிழக அரசால் அமைக்கப்பட்டுள்ளது. கல்லூரி பேராசிரியர்கள், அலுவலர்கள் மற்றும் மாணவர்கள் ஆகியோர் குழு முன்பு ஆஜராகி விளக்கமளித்துள்ளனர். கல்லூரி மாணவர் கொலைக்கு ராகிங் காரணமல்ல, அவர்களுக்குள்ளிருந்த முன் விரோதமே காரணமென்று பேராசிரியர்கள் தரப்பில் விளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. ராகிங்கும், முன் விரோதமும் இணைந்ததே இக் கொலைக்குக் காரணமென மாணவர்கள் தரப்பிலிருந்து சொல்லப்பட்டிருக்கிறது.

இந்திய மாணவர் சங்கத்தின் திருச்சி மாவட்ட செயலர் பொன். வேலுசாமியைச் சந்தித்தோம்.

"ஈவ் டீசிங் - ராகிங் கொடுமைகளுக்காக சென்னை சரிகா ஷா, சேலம் தனலெட்சுமி, கன்னியாகுமரி அமுதா உட்பட பத்துப் பன்னிரண்டு மாணவ மாணவிகளை இதுவரை இழந்துள்ளோம். இதற்கு அரசாங்கம் முறையான ஒழுங்கு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். ஈவ்டீசிங் - ராகிங் என்பது மனிதத் தன்மையற்ற செயல். அதைத் தடுப்பதற்கு அனைத்துக் கல்லூரிகளிலும் பால் நட்புணர்வு குழு ஒன்றினை ஏற்படுத்திட வேண்டும். எங்கள் இந்திய மாணவர் சங்கம் சார்பாக கடந்த ஆண்டு சென்னை புதுக் கல்லூரி, எத்திராஜ் கல்லூரி, நந்தனம் கலைக் கல்லூரி ஆகிய மூன்றிலும் புது முயற்சி ஒன்றைக் கையாண்டு அதில் வெற்றியும் கண்டுள்ளோம். கல்லூரியின் முதல் நாளன்று இரண்டாமாண்டு, மூன்றாமாண்டு மாணவர்கள் அனைவரும் முதலாமாண்டு மாணவர்களுக்கு இனிப்புகள் கொடுத்து இன்முகத்துடன் நட்புணர்வோடு அவர்களை வரவேற்கும் நிகழ்வினை நடத்திக் காட்டினோம். இந்த இனிய முயற்சி என்பது மாணவ மாணவிகளிடையே ஈவ்டீசிங்- ராகிங் சம்பவங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கும்" என்கிறார் அவர்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## கல்கி - VBC Jewellery

இணைந்து வழங்கும்

### புன்னகைப் போட்டி- 23 முடிவு:

**கா**விரி சம்பந்தமாக எஸ்.எம். கிருஷ்ணாவுக்கு அட்வைஸ் பண்ணும் தமாஷ் கமெண்டுகள் கேட்டிருந்தோம். நெத்தியடியாக அட்வைஸ் செய்து பரிசு பெறுகிறார்கள்...

அம்முவைக் கொடுத்தீங்க;
ஜம்முன்னு அரியணை ஏத்திட்டோம்;
பாபாவைக் கொடுத்தீங்க;
வாவான்னு ஏத்துக்கிட்டோம்;
காவிரித் தண்ணி கேட்டா மட்டும்
கையை விரிக்கலாமா...?
காசா பணமா யோசிக்க
கருணை போதும் கிருஷ்ணா கிருஷ்ணா!

வில்சன் இந்திரஜித்.
அக்ரஹாரம், புள்ளமங்கலம் (அஞ்சல்)
வடபாதிமங்கலம் வழி, திருவாரூர் மாவட்டம்

காவிரி என்றால் 'வம்பு'
கர்நாடகா என்றால் 'வீம்பு'
காவிரி நதி நீர் ஆணையத்துக்கில்லை 'தெம்பு'
உச்சநீதி மன்றம் போக மாட்டோம் 'நம்பு'
தமிழகம் தூக்கணுமா 'செம்பு'
காட்ட வேண்டாமோ
கிருஷ்ணா... நீ 'அன்பு'?

கே.ஜி.எஸ். கோவிந்தன்
4/83, சன்னதி தெரு,
கிருஷ்ணபுரம் - 627011, நெல்லை மாவட்டம்



“மன்னருக்கு வேட்டையாடத் தெரியாது என்று சொன்னேனே!”

# ஆ... அரசே!

“அம்பு தயாரிப்பாளரைக் கூப்பிடுங்கள். ஏதோ முறைகேடு நடந்திருக்கிறது.”



‘‘கபாட குன்றிலிருந்து
புலவர் புள்ளியப்ப
பொன்னப்ப புலம்பல்
கவிராயர் வந்திருக்கிறார்
அரசே!’’
‘‘அப்படியா! எம்மையும்
எம் குலத்தையும்
புகழ்ந்து பாடியபின் அரசு
கஜானாவுக்கு ஐந்நூறு
பொற்காசுகளை
அளித்துவிட்டுப் போகச்
சொல்லுங்கள்.’’

‘‘வேகமாகக் குத்தாதீர்கள்
என்றேனே, கேட்டீர்களா?’’



‘‘அப்பா...’’
‘‘மூச்... பென்சில்
சீவுவதற்கெல்லாம்
உடைவாளைப்
பயன்படுத்தக்
கூடாது!’’



- ஏக்ஜி
படங்கள் : பிள்ளை








# நடக்கும் என்பார்;

**மேஷம் :** இந்த வாரம் புதிய முயற்சிகள் வெற்றி பெறும். புதிய பொறுப்புகள் சிலருக்கு வந்து சேரலாம். வியாபாரம், தொழில் சம்பந்தமாக சிலர் வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. எதிர்ப்புகள் மறைந்து நல்ல நிலை ஏற்படும். பண நடமாட்டத் துக்குப் பஞ்சமில்லை. ஏற்றுமதி இறக்குமதியில் நல்ல லாபம் உண்டு. குடும்பத்தில் சுப காரிய முயற்சிகள் கூடி வரும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். புதிய பொருள் சேர்க்கை, வாழ்க்கை வசதிகள் போன்ற நல்ல பலன்கள் இருக்கு. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குக் கொண்டாட்ட வாரம்.

**ரிஷபம் :** குடும்பத்துல அமைதி நிலவும். நண்பர்கள் உறவினர்கள் உதவ முன் வருவாங்க. உடல் ஆரோக்கியம் சீரா இருக்கும். வேலை பார்க்கிற இடத்துல உங்களுக்குச் சாதகமான திருப்பம் கிடைக்கும். வியாபாரத்தில் இது வரை இருந்து வந்த தடைகள், குறுக்கீடுகள் விலகும். பண வசதிக்குப் பஞ்ச மில்லை. மறைமுகமான எதிர்ப்புகள் மாயமாகும். இழுத்தடித்துக் கொண்டிருந்த சொத்து விவகாரம் சாதகமாகும். பெண்கள் புதிய பொருள், அணிகலன்கள் வாங்க வாய்ப்பிருக்கு. மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள்.



**மிதுனம் :** இந்த வாரம் உற்சாகம் கரை புரளும். இதனால் வாக்கு சாதுர்யம், பேச்சில இனிமை உண்டாகும். எடுத்தக் காரியத்தை நிறைவேற்றி வெற்றி பெறுவீங்க. பயணத்தால் நன்மை உண்டு. தொழில் சம்பந்தமாக வெளியூர் போக வேண்டி வரலாம். புதிய தொழில் சம்பந்தமான முயற்சிகள் கை கூடும். கணவன் மனைவி உறவு நிலை திருப்திகரமாக இருக்கும். உறவினர்களுக்குள் இதுவரை இருந்து வந்த மனஸ்தாபம், சண்டை சச்சரவு யாவும் தீரும். எதிலேயும் வேகம் வேண்டாம். பெரியவங்க ஆலோசனை அவசியம்.

**கடகம் :** இந்த வாரம் எடுத்த காரியத்தை எப்பாடுபட்டாவது முடிச்சிடு வீங்க. வெளிநாட்டுலயிருந்து நல்ல தகவல் வந்து சேரும். அலுவலகத்தில் சில பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். பொறுமையைக் கடைப்பிடியுங்க. வியாபாரத்தில் போட்டிகள் விலகி நன்மை உண்டாகும். கொடுக்கல் வாங்கலில் அனுகூலமான நிலைமை தெரியும். இயந்திரம், இன்டஸ்ட்ரீஸ், ஏற்றுமதி இறக்குமதி துறைகள்ல இருக்கறவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல மகிழ்ச்சி நிலவும். பெண்களுக்கு இது உற்சாகமான வாரம்.

**சிம்மம் :** இந்த வாரம் புதிய முயற்சிகள் உங்களுக்கு வெற்றி தரும். எதிர்ப்புகள் மறையும். உத்தியோகத்தில் சிக்கல்கள் பிரச்னைகள் விலகி, ஆரோக்யமான சூழ்நிலை நிலவும். எதிர்பார்த்திருந்த பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஏற்படும். இதுவரை வராமல் இழுத்தடித்துக் கொண்டிருந்த தொகை இப்போது வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு கூடும். குடும்பத்தில் மகிழ்ச்சி உண்டாகும். நண்பர்கள் நெருங்கிய உறவினர்கள் உதவ முன் வருவார்கள். குடும்பத்தில் பிரிந்து போனவர்கள் இப்போது ஒன்றாக இணைய வாய்ப்பிருக்கு.

**கன்னி :** இந்த வாரம் உற்சாகம் கரைபுரளும். எல்லா காரியத்திலும் வெற்றி உண்டு. கோர்ட், வழக்கு விவகாரங்களில் எதிர்ப்புகள் மறையும். உத்தியோகத்தில் ஆதரவும் ஒத்துழைப்பும் உண்டு. புனிதப் பணிகளில் ஈடுபாடு அதிகரிக்கும். குடும்பத்துல இதுவரை இருந்து வந்த விரோதம், மனஸ்தாபம் காரணமாக பிரிந்தவர்கள் ஒன்று சேரும் வாய்ப்புகள் உண்டு. கடன் தொல்லை நீங்கும். புதிய தொழில்களில் வெற்றி உண்டு. முன்பின் தெரியாதவர்களிடம் அதிகம் பழக வேண்டாம்.

**அக்னிசர்மா பக்கம்**

## நடக்கும்!



**துலாம் :** இந்த வாரம் தேவைக்கேற்றபடி பணம் வரும். இதனால மனசுல நிம்மதி பெருகும். கோர்ட் வழக்கு விவகாரங்கள்ல எதிர்பாராத திருப்பம் உண்டாகும். மேலதிகாரிகள் பாராட்டு உண்டு. எதிர்ப்புகள் மறையும். தொழில் செய்பவர்களுக்குச் சங்கடங்கள் இடையூறுகள் இருந்தாலும் அவற்றை வென்று வெற்றி நடை போடுவீங்க. ரசாயனம், எலக்ட்ரானிக்ஸ், தோல் பொருள், ரெடிமேட் ஆடைகள் ஆகிய தொழில்கள் செய்கிறவர்களுக்கு நன்மை உண்டு. குடும்பத்துல ஒற்றுமை மகிழ்ச்சி நிலவும். குடும்பத்துடன் வெளியூர் போக வாய்ப்பிருக்கு.



**விருச்சிகம் :** இந்த வாரம் திட்டமிட்டபடி எடுத்த காரியத்தை முடிச்சுடுவீங்க. வேலை விஷயமாக வெளியூர் / வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. அலுவலகத்தில் சில சிக்கல்கள் ஏற்பட்டு விலகும். புதிய வேலை முயற்சிகள் இப்போது வேண்டாம். புதிய தொழில்கள், முதலீடுகள் கூடவே கூடாது. இதுவரை வராத கடன் பாக்கிகள் வசூல் ஆக வாய்ப்பிருக்கு. எழுத்து, பத்திரிகை, அச்சகம் எலக்ட்ரானிக்ஸ் ஆகிய தொழில்கள் லாபம் தரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சுபகாரிய முயற்சிகள் கைகூடும்.



**தனுசு :** இந்த வாரம் மனசுல இனம் புரியாத குழப்பம், பயம், சோர்வு இருந்தாலும் கிரக பலத்தால் சமாளிப்பீர்கள். பேச்சாற்றல், சமயோசித புத்தி, சாதுர்யத்தால் சாதிப்பீர்கள். மறைமுக, நேர்முக எதிர்ப்புகள் மறையும். அலுவலகத்தில் புகழ் பாராட்டு கிடைக்கும். புதிய முயற்சிகளைக் கொஞ்ச காலம் ஒத்திப் போடுவது நல்லது. சுயமாக வேலை பார்க்கிறவர்கள் விழிப்போடு செயல்படவும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையாக இருப்பது நல்லது. பார்ட்னர்ஷிப்ல தொழில் பண்ணுகிறவர்கள் விழிப்புடன் இருப்பது அவசியம். மனக்கசப்பு வரலாம். குடும்பத்தில் எதிர்பாராத செலவுகள் ஏற்படலாம்.

**நடிகை ஷர்மிளாவின் கணவர் மோகனுக்கு (கன்னி ராசி) உற்சாகம் கரை புரளுமாம்!**



**மகரம் :** இந்த வாரம் அனைத்துக் காரியங்களிலும் அனுகூலமான திருப்பம் உண்டாகும். எதிர்ப்புகள் விலகி ஓடும். வழக்கு விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் ஏற்படும். சிலருக்கு எதிர்பார்த்தபடி பதவி உயர்வு, ஊதிய உயர்வு கிடைக்கும். தனியார் நிறுவனத்தில் பணிபுரிவோருக்கு, திறமைக்கு ஏற்ப பாராட்டு, கிடைக்கும். குடும்பத்தில் கணவன் மனைவி உறவு நிலை சிறப்பாக இருக்கும். பெண்களுக்கு உற்சாகமான வாரம். கொடுக்கல் வாங்கல் தக்க சமயத்தில் கைகொடுக்கும். பேச்சில் நிதானம் அவசியம்.



**கும்பம் :** இந்த வாரம் கொஞ்சம் உஷாராகவே இருங்க. குழப்பமும் தாமதமும் அதிகரிக்கும். எந்தக் காரியமும் இழுத்தடித்துக் கொண்டே இருக்கும். சிலருக்குப் புதிய உத்தியோக முயற்சிகள் கைகூடும். எதிர்ப்புகள் இருக்காது. வியாபாரம் சம்பந்தமாக வெளியூர் / வெளிநாடு போக சிலருக்கு வாய்ப்பிருக்கு. இயந்திரம், வாகனம், கமிஷன், ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு லாபம் கொட்டும். குடும்பத்தில் அமைதி நிலவும். சொத்து சம்பந்தமாக இருந்து வந்த சிக்கல் விலக வாய்ப்பிருக்கு.



**மீனம் :** இந்த வாரம் சரளமாக பணம் புரளும். மனசுல நிம்மதியும் சந்தோஷமும் குதூகலிக்கும். குருபலம் பூரணமாக இருப்பதால் பெண்களுக்கு நகை நட்டு, ஆடைகள் வாங்கிக் குவிக்க வாய்ப்பிருக்கு. புதிய முயற்சிகள் கைகூடும். வராமல், டென்ஷன் ஏற்படுத்திக் கொண்டிருந்த உங்கள் பணம் இப்போது வந்து சேர்ந்து இனிமை பயக்கும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நடக்க சந்தர்ப்பம் வரலாம்.

**ஆகஸ்ட் 7 முதல் 13 வரை**

# கமான் கபில்!

ஏதோ ஆஸ்கார் நிகழ்ச்சிபோல இருக்கிறது. லண்டனில் நடைபெற்ற 'இந்திய' ஆஸ்கார் மேடையில் கையசைத்தபடியே விவியன் ரிச்சர்ட்ஸ் தோன்றுகிறார். அவர் கையில் ஒட்டப்பட்ட உறை. அதில்தான் பிரபல கிரிக்கெட் இதழான 'விஸ்டனின்' தேர்வு இருக்கிறது.

இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட ரிச்சர்ட்ஸ் (சந்தேகமிருந்தால் நீனா குப்தாவைக் கேட்டுப் பாருங்கள்) புன்னகைத்தபடியே உறையைப் பிரிக்கிறார். 'யார் சென்ற நூற்றாண்டின் தலைசிறந்த இந்திய கிரிக்கெட் வீரர்?' 'கபில்தேவ்' என்று அவர் அறிவித்ததும் சஸ்பென்ஸ் உடைந்து ஆரவாரக் கூச்சல் எழுகிறது.



434 விக்கெட்டுகள் - இந்தியாவுக்காக ஆடத் துவங்கிய ஒன்றரை வருடங்களுக்குள்ளாகவே நூறு விக்கெட்டுகளை வீழ்த்தியவர்).

5248 ரன்கள் (ஜிம்பாப்வே அணிக்கெதிராக ஆட்டமிழக்காமல் 175 ரன்களை அவர் எடுத்ததை மறக்க முடியுமா?)

அற்புதமான பல காட்சகள் (1983ல் உலகக் கோப்பை இறுதிச் சுற்றில் ரிச்சர்ட்ஸைத் தமது அற்புதமான காட்ச்சினால் அவுட்டாக்கியது, அடடா!)

கபில் கபில்தான்.

பதினாறு பேர் தேர்வு பெற்றிருந்தார்கள். அவர்களில் ஆறு பேரால் நிச்சயம் விழாவுக்கு வர முடியாத சூழல். காரணம் அவர்கள் அமரர்களாகி விட்டிருந்ததுதான்!

மற்றபடி ஆஜராகி விட்டார்கள். தன் வெளிப்படையான பேச்சினாலும் கிரிக்கெட் உலகைக் கலக்கிய பிஷன்சிங் பேடி,

அடக்கமான வெங்சர்க்கார், தனி வாழ்வில் சொல்ல முடியாத சங்கடங்களை அனுபவித்தும் நம்பிக்கையோடு வாழ்க்கையை நடத்தும் பி. சந்திரசேகர், ஜென்டில்மேன் குண்டப்பா விஸ்வநாத், 'பார்வை ஒன்றே போதும்' என்றபடி மிக இளம் வயதிலேயே கேப்டனாகி சரித்திரம் படைத்த டைகர் பட்டோடி, ஒரு இன்னிங்ஸின் அத்தனை விக்கெட்டுகளையும் வீழ்த்திய அனில் கும்ளே ஆகியோரும் மேடையில் அமர்ந்திருந்தார்கள். ஆனால் போட்டி என்னவோ கவாஸ்கர், கபில்தேவ், சச்சின் டெண்டுல்கர் ஆகியோருக்கிடையேதான் என்பது கிட்டத்தட்ட எல்லாருக்குமே தெரிந்திருந்தது. முக்கியமாக, விழாவை ஏற்பாடு செய்திருந்தவர்களுக்கு இது மேலும் வெளிப்படை.

விருது பெற்றவரே நேரிடையாக வந்து அதை வாங்கிக் கொண்டால்தானே அமைப்பாளர்களுக்குப் பெருமை? எனவே மற்ற ஆறு பேருக்கும் விமானக் கட்டணத்தை மட்டும் அளித்த நிர்வாகிகள் மேற்படி மும்மூர்த்திகளுக்கு அதிகப்படியாக ஒரு தொகையையும் வழங்கியிருந்தார்களாம்.

இந்த இடத்தில் கணிதப் பிரியர்களுக்கு ஒரு மண்டைக் குடைச்சல் ஏற்பட்டிருக்கும். பதினாறு பேரில் ஒருவர் குறைகிறாரே? அந்த ஒருவர் முகமது அசாருதீன்.

சாதனைப் புள்ளிவிவரங்களை வைத்து அசாருதீனையும் இறுதிச் சுற்றுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டாலும் அவருக்குச் சரியாசனம் கொடுப்பதில் நிர்வாகிகளுக்குத் தயக்கம். அழைப்பிதழ் அனுப்பினார்களே தவிர, விமானக் கட்டணம் அனுப்பவில்லையாம். 'ஒரு வேளை அவர் வந்து அதனால் பிறருக்குச் சங்கடம் ஏற்பட்டால்?' என்று ஐயம் தெரிவித்தாராம் ஒரு அதிகாரி.

ஆனால் அவர்களது சந்தேகத்துக்கு மாறாக இருந்தது கபில்தேவின் ஏற்புரை. அசாருதீனை வாயாரப் பாராட்டினார். அவர் வராதது ஒரு குறைதான் என்றார். தமது எதிரியாகக் கருதப்பட்ட கவாஸ்கரைப் பற்றியும் உயர்வாகக் கூறினார். வேறொரு பேட்டியில், அசாருதீனின் கிரிக்கெட் வாழ்வை அஸ்தமிக்கச் செய்தது பத்திரிகைகள்தான் என்றார். ஒரு தலைசிறந்த கேப்டனைவிட யாரோ ஒரு மனோஜ்குமார் மற்றும் குப்தா ஆகியோரின் வாக்குமூலங்கள் முக்கியமானவையா என்ற கேள்வியை எழுப்பினார்.



இரண்டு கேள்விக்கு இன்றுவரை பதில் கிடைக்காததினாலேயே கபில் கூறிய எதுவும் விரோதத்தை உண்டாக்கவில்லை என்பதுடன் அவருக்குக் கிடைத்த விருதைப் பற்றிய எதிர் விமர்சனத்தையும் கணிசமான அளவில் எழுப்பவில்லை.

சென்ற நூற்றாண்டின் முதல் முக்கால்வாசி வருடங்களில் கபில் அளவுக்குச் சிறந்த ஆல்ரவுண்டராகத் திகழ்ந்தவர் யார்? பத்து வருடங்களுக்கு முன் அவர் கிரிக்கெட்டிலிருந்து ஓய்வுபெற்ற பிறகு அவரது இடத்தை நிரப்பத் தகுந்த ஆல்ரவுண்டர் உண்டா?

— ஜி.எஸ்.எஸ்.

நன்றி : ஸ்போர்ட்ஸ் ஸ்டார்

# ஸ்ரீ

மெகா தொடர்களைப் போல படையெடுத்த பேட்டை ரவுடிக் கதைகளின் நீட்டிப்பாக வெளி வந்திருக்கும் 'ஸ்ரீ' படத்தில், ஆவின் முகத்தோடு ரௌடியாக வருகிறார் சூர்யா.

கண்களை உஷ்ணமாய் அகல விரித்து நடு ரோட்டில் கோதாவில் இறங்கும்போது மட்டும் வேடத்திற்குப் பொருத்தமாகத் தெரியும் சூர்யா, மற்ற நேரங்களில் மெட்ரிக் மாணவர் போல மென்மையாகத் தெரிவது உண்மை.

சாதுவாக இருந்த பிராமண இளைஞன் 'ஸ்ரீ' எப்படி ரவுடி ஆனான் என்பதன் பின்னணியில், 'தினத்தந்தி' க்ரைம் நியூஸ் அயிட்டம் மாதிரி வலுவான ப்ளாஷ்பேக்கைக் கொண்டு திரைக்கதை அமைத்திருக்கிறார் அறிமுக இயக்குனர் புஷ்பவாசகன். இந்த ப்ளாஷ்பேக்கிற்கு முதல் பாதியில் ரசிகர்களைத் தயார்ப் படுத்த வேண்டிய இயக்குனர், கோர்வையில்லாத, துண்டுத் துண்டான காட்சிகளால் ரசிகர்களைச் சோதித்து விடுகிறார். படத்தில் பல பாத்திரங்களின் பின்னணி பற்றி மூச்சே விடாத இயக்குனர் 'ஸ்ரீ'யின் தந்தை பாத்திரத்தை குணாதிசய முரண்பாட்டின் மொத்த உருவமாக நடமாட விட்டிருக்கிறார். தலைவாசல் விஜய், 'கதை நேரம்' சசி போன்றவர்களெல்லாம் ஏன் இத்தனை எமோஷனல் ஆகிறார்கள் என்பதற்குக் காரணம் தேடியும் புலப்படவில்லை.



அறிமுக நாயகி ஸ்ருதிகா, மலர் கண்காட்சியிலிருந்து, தப்பித்து வந்த புத்தம்புது பூ மாதிரி தெரிகிறார். ஆனால் நடிப்பில் மட்டும் மொட்டு.

காயத்ரி ஜெயராமுக்கு சில காட்சிகளே என்றாலும் ஊதி தள்ளி விட்டுப் போய்விடுகிறார்.

அறிமுக இசை அமைப்பாளர் டி.எஸ். முரளிதரன் தேறி விடுகிறார் என்றாலும், பின்னணி இசையில் தனி கவனம் செலுத்தினால்தான் தாக்குப் பிடிக்கலாம்.

படத்தின் முடிவை நீதிமன்ற வளாகத்தில் அமைத்து வாதங்களில் அசத்த முடிவு செய்த இயக்குனர், இன்னும் நிறைய ஹோம்வர்க் செய்திருக்கலாம். வலுவான கதை அம்சம் இருந்தும், தேவையில்லாத காட்சிகள், பாத்திரப் படைப்புகளில் கோட்டை விட்டதால் 'ஸ்ரீ' தடுமாறி விட்டது - குண்டர் தடுப்புச் சட்டத்தில் மாட்டிக் கொண்ட நிஜ ரௌடியைப் போல!

— விஷ்வல்தாசன்

• ஆவெரஜ்



# திருக்கயிலாயம் - மானசரோவர் புனித யாத்திரை!



**ஆன்மீக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!**

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பரந்த பாரததேசத்தில் இறைவன் திருக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றார். மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய் தொடங்கினோர்க்கு ஓர் வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே! என்பார் தாயுமானவர். எனவே பக்தர்கள் தென்னகத்திலிருந்து வடக்கும் வடக்கிலிருந்து தென்னகமும் யாத்திரை செல்வது மிக முக்கியம். நமது நாயன்மார்களால் போற்றப் பெற்றதும், பாடல் பெற்றதும், மாற்று சமயத்தாராலும் வணங்கப் பெற்றதுமான திருக்கயிலாயம் - மானசரோவர் யாத்திரையை வரும் 29.8.2002 அன்று பெங்களூரிலிருந்து விமானம் மூலமாக காட்மாண்ட் - காட்மாண்டிலிருந்து திருக்கயிலாயம் வரை டயோட்டா கார் மூலம் சென்று வர ஏற்பாடு செய்துள்ளோம். கடல் மட்டத்திலிருந்து 22,000 அடிக்கு மேலாக இருப்பதால் உடல்நலத்திற்கு மருத்துவ சான்றிதழ் மிக அவசியம்.

**விமான கட்டணம் உட்பட ரூ.72,000/-**

மேலும் விவரங்களுக்கு:

## ஸ்ரீ இராமகிருஷ்ணா யாத்ரா சர்வீஸ்

H.O : 13, பொன்னம்பல வாத்தியார் தெரு, மயிலாப்பூர், சென்னை - 4. ✆ : 044- 4616466
B.O: No. 20, வைஷ்ணவி நகர், சந்திரன் கார்டன், சின்ன திருப்பதி, சேலம் - 636 008.
✆ : 0427 - 410100, 311810 Cell No: 98427 - 44868

---

## விற்பனையாகிறது!

# ஆன்மீகம்

(தெய்வீக மாத இதழ்)

ஆகஸ்ட் 2002
ஆடிச் சிறப்பிதழ்

- ★ ஆன்மீக ஓவியர் ராஜா வரைந்த சென்னை ஸ்ரீ காளிகாம்பாள் வண்ண முகப்பு அட்டை!
- ★ மரணம் என்ற ஒன்று பேசுகிறது!
- ★ ஆறாதாரம் - மூலாதாரம்!
- ★ மனம் வெளுக்க மதக்கல்வி!
- ★ தென்னவன் பிரமராயன்!
- ★ மன மாற்றம் தேவைதான்!
- ★ வாழ்க்கை நெறி உயர்வானது!

ரூ.10



**படித்து பக்தி மழையில் நனையுங்கள்!**

# குறையொன்றுமில்லை

வேத பாஷ்யாதிகாரி வித்யாரண்ய சுவாமி எழுதுகிறார். வேதத்துடைய பொருளைச் சொல்கிறபோது, அதன் திருஷ்டாந்தம் நமக்கு நன்றாகப் புரிய வேண்டும் என்பதற்காக எடுத்துச் சொல்கிறார் :

ஒரு பரம ஏழை. தரித்திரன். ரொம்ப சிரமப்படுகிறான். ஒரு பெரிய தனவந்தருடைய வாசலில் போய் 'தேஹிமே!' என்று கேட்கிறான். அவரோ ரொம்ப வள்ளன்மை மிக்கவர். வாரி வாரி கொடுக்கக் கூடியவர்.

அவர் இந்த ஏழையுடைய கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புழக்கடை பக்கம் போகிறார். போனால், நான்கு ஏக்கர் விஸ்தீரணப் பரப்பு... அதிலே கிட்டத்தட்ட இரண்டாயிரம் யானை கட்டப்பட்டிருக்கிறது! அந்த இரண்டாயிரம் யானைகளையும் காட்டி, "இது மொத்தத்தையும் உனக்கே கொடுக்கிறேன்; ஓட்டிக் கொண்டு போ!" என்கிறார்.

இவர் என்ன பண்ணுவார்?... பரம தரித்திரர். அடுத்த வேளைக்குச் சாப்பாடில்லை. பரம ஏழை! அவரைப் பார்த்து இரண்டாயிரம் யானையும் உனக்குத்தான் என்றால் என்ன பண்ணுவார்! அப்படியே ஓட்டிக் கொண்டு போனால் அதை எங்கே கட்டுவது? யார் அதற்குத் தீனி போடுவது? ஒரு யானைக்கே இந்தக் கதையென்றால் இரண்டாயிரம் யானைகளை என்ன பண்ணுவது?

அந்த மாதிரி, சர்வ விதத்திலும் ஏழைகளான, எந்தவிதத்திலும் சக்தியற்ற மந்தாத்மாக்கள் நாம்! சுகபிரும்ம மஹரிஷி அழகாகச் சொல்லுவார். கலியுகத்திலே இருக்கும்படியான நமக்கு எதையெடுத்தாலும் மந்தமாம்! 'மந்த பாக்யம்!' என்கிறார்.

இரண்டாயிரம் யானை கிடைக்கப் பெற்ற ஏழை மாதிரிதான் நாமும். அர்ஜுனன் பண்ணிய மாதிரி நாமும் பகவானைச் சுற்றி வந்து நமஸ்கரிக்கலாம்; அவ்வளவுதான்! வேறு என்ன பண்ண முடியும்!

ஆனால் பரமாத்மா பக்தவசன் ஆயிற்றே! அவனே நம்மைக் கவனித்துக் கொள்வான். அந்த யானையைக் கட்டக்கூடிய சங்கிலியை யானையே எடுத்துக் கொடுத்தால் எப்படி இருக்கும்...? அந்த மாதிரி, அவனைக் கட்டக் கூடிய உபாயத்தை, அவனே நமக்குச் சொல்லியிருக்கிறான்.

'எட்டினோடு இரண்டெனும் எழுத்தினால் மனத்தைக் கட்டி...' என்கிறார் திருமழிசையாழ்வார்.

எட்டு - அதோடு இரண்டைச் சேர்த்தால் பத்து. பத்து என்றால் பக்தி என்று அர்த்தம். அடியார்க்கு எளியவனான காரணத்தால் பகவானுடைய சரணாரவிந்தத்திலே உத்தமமான பக்தி இருந்தால் அவனைச் சுலபமாகக் கட்டலாம். 'அவனிடத்திலே பக்தி' என்கிற உத்தமமான உயர்ந்த கயிற்றை, அவனே நம் கையில் கொடுக்கிறான். கட்ட வேண்டியது நம் பொறுப்பு. அதைத்தான் வேத மந்திரமானதும் சொல்கிறது :

எவனுடைய பெருமையை
உலகம் முழுவதும் உபாசிக்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் 2

கிறதோ, அவனை உபாஸிக்க வேண்டும். பக்தி யோகமே உபாஸனைதான்.

உபாஸனைக்கு உதாரணமாக ஒருத்தரைச் சொல்ல வேண்டுமானால் பிரஹலாதன் தான். பிரஹலாதன் அப்படி இடைவிடாது உபாஸித்தான். நம் உபாஸனையும் அறுபடாமல் சந்தத தாரையாக இருத்தல் வேண்டும். அறுபட்டு விட்டால் பிரயோஜனம் இல்லை. எப்படி சுவாஸம் நின்றுவிட்டால் இந்த சரீரத்துக்குக் கௌரவம் இல்லையோ, அப்படியே உபாஸனை நின்று விட்டால் சுவாஸத்துக்குக் கௌரவம் இல்லை.

இந்த உபாஸனை ஒரே ரீதியாக, சந்தத தாரையாக - வஸோர்த்தாரா ஹோமம் பண்ணுவது போல் இருக்க வேண்டும் என்றும் நமக்குத் தெரியும்.

ஹோமத்தின் போது வஸோர்தாரை வழியே வார்க்கிற நெய் இருக்கிறதே அது ஒரே ரீதியிலே விழ வேண்டும் - ரொம்ப மெல்லியதாகவும் விழக் கூடாது; ரொம்ப பருமனாகவும் விழக் கூடாது. முதலில் கொஞ்சம் மெலிசாக விழுந்து விட்டதே என்று பின்னால் பருமனாகச் சேர்க்கக் கூடாது; தாரை அறுபடவும் கூடாது.

- பகவத் ஸ்மரணையும் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று மகான்கள் பேசினார்கள்.

இப்படி உபாஸிப்பவர்களுக்குத்தான் திரும்பி வருதல் இல்லாத, சாஸ்வதமான நித்யானந்தம் அவன் திருவடியிலே கிடைக்கும். அந்த வைகுண்டத்திலே - வானின் வரசிலே – மறுபடியும் பிறவியில்லாத, நித்யானந்தம் கிடைக்கும்.

ஐந்நூற்றி நாற்பத்தைந்தாவது பிரும்ம சூத்திரத்தில் - கடைசி சூத்திரம் அது – அதிலே வியாஸ பகவான் இதைத்தான் பூரணமாகக் காட்டுகிறார். உயர்ந்த, சாச்வதமான நித்யானந்தத்தை அடைய வழி உபாஸனைதான் என்கிறார்.

கீதையிலே பகவானும் இதைத்தானே சொன்னான்.

'உயர்ந்த பக்தியினால் நான் அடையத் தகுந்தவன்' என்றான். பக்தி யோகத்தை 'மிகவும் ரகசியமானது' என்று குறிப்பிடுகிறான். பக்தி யோகத்தில் சொல்லப்படக் கூடிய ரீதியில் அவனை உபாஸனை பண்ணினால்தான் பரமாத்மா யார் என்பதை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

இதைத்தான் பராசர பட்டர் தமது வியாக்யானத்தில் எழுதுகிறார்.

மாத்வாச்சார்யாரும் அதையே வலியுறுத்துகிறார். ஆதி சங்கர பகவத்பாதாள் விவரிக்கிற சமயத்திலே, பக்தியினால் அவனுடைய விசேஷமான, உயர்ந்த நன்மைகளை நாம் நன்கு உணர முடியும் என்கிறார்.

எல்லா ஆசார்யர்களும் ஒன்றையே ஒருமித்துச் சொல்கிறார்கள்.

பக்தி என்கிற பிரபாவத்தை தசோபநிஷத்துகளும் நமக்குக் காட்டிக் கொடுக்கின்றன. எத்தனையோ உபநிஷத்துகள் இருக்கின்றன. அதிலே முக்கியமாக, ஆசார்யர்களாலே அடையாளம் காட்டப்பட்டவை பத்து.

அவற்றினுடைய சாரமான விஷயத்தை நாம் புரிந்து கொண்டோமானால் பரமாத்மா யார் என்பதை நாம் உணர முடியும். இந்த பத்து உபநிஷத்துகள் விசேஷமாகச் சொல்லக்கூடிய விஷயம் பிரும்ம வித்யை என்பது - பிரும்மத்தை நமக்குக் காட்டிக் கொடுக்கும்படியான வித்யை அது. 32 பிரும்ம வித்யைகளினால் எவனொருவன் ஆராதிக்கப்படுகிறானோ, அவன்தான் பரமாத்மா.

பரமாத்மா என்றால் 'எல்லாவற்றுக்கும் மேம்பட்டவன் - பிரும்ம வித்யைகளால் ஆராதிக்கப்படுகிறவன்' என்று பொருள்.

**ய**திச்வரர்கள், சன்னியாசிகளை நமஸ்காரம் பண்ணுகிறபோது ஒரு மந்திரம் சொல்வது உண்டு. 'தஹ்ரம் விபாத்மம்' என்று தொடங்குகிறது அந்த மந்திரம். அதிலே விசேஷமான அர்த்தம் உண்டு.

தஹ்ரம் என்றால் மேல் வானம். ஆகாசத்துக்கும் மேலே மேல் வானம் என்று இருக்கிறது. தஹர புண்டரீகம் என்று பெயர். மேல் வானம் என்று ஒன்று இருக்கிறது என்று

---

"ஒழுங்கா மாமூல் குடுக்கறவன்தான் இந்தத் திருட்டை செஞ்சிருக்கணும்!"

"எப்படி கண்டு பிடிச்சீங்க?"

"திறந்து கிடக்கற பீரோவைப் பார்த்து நாய் மோப்பம் பிடிக்காம வாலாட்டி நிக்குதே!"

– அம்பை தேவா



சொன்னால், கீழ்வானம் என்பதாகவும் ஒன்று இருக்கிறதல்லவா!

அதனால்தான் ஆண்டாள்,

'கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு

......' என்று கீழ்வானத்தையும் பேசினாள்.

கீழ்வானம் என்பது நாம் வாஸம் பண்ணக்கூடிய இந்தப் பிரக்ருதி மண்டலத்தின் வானம். அது 'வெளுத்தது' என்று ஆண்டாள் பாடுகிறாள். அப்படியானால் அந்த வேளையில், இங்கேயே - இந்த உலகிலேயே - ஸத்வ குணம் மேலிட்டு நிற்கிறது. ரஜோ குண, தமோ குணங்களெல்லாம் நசிந்து விட்டன.

நல்ல ஸத் குணங்கள் ஓங்கி நிற்கின்றன என்பதால் கீழ் வானத்தைக் கொண்டாடுகிறாள் திருப்பாவையிலே.

மேல் வானம் இருக்கிறதே, அதற்கு தகர புண்டரீகம் என்று பெயர். அங்கே எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிறான்.

அதைப் 'பரம்' என்று சொல்கிறது உபநிஷத். அந்த பரமாகிற மேல்வானத்துக்கு அந்தராத்மாவாக இருக்கக்கூடியவன் பரமாத்மா. அவனை நாம் அடையக்கூடிய உபாயம் என்ன...?

அங்கே இருக்கிற எம்பெருமானை இங்கே உபாஸிக்க வேண்டும்.

கர்மாவினாலேயோ, சந்தான - சௌபாக்கியத்தினாலோ அவன் அடையப்படக்கூடியவன் அல்ல.

தியாகம் ஒன்றினால்தான் அவனை அடைய முடியும். அம்ருதத்வத்தை அடைய முடியும். அம்ருதமாகிற எம்பெருமானை அடைய முடியும்.

தியாகம் என்றால் என்ன...? ஒரு வஸ்துவை, என்னுடையது என்று நினைத்துக் கொண்டிருக்கிறானே, அதை எம்பெருமான் பொருட்டு என்று அர்ப்பணித்தல்.

கிடைக்கக்கூடிய தானியங்கள், பசுவினிடத்திலிருந்து கிடைக்கக்கூடிய பால், தயிர், நெய்... இதையெல்லாம் அந்தக் காலத்தில் யக்ஞம் பண்ணி, அந்த யக்ஞத்திலே 'விஷ்ணவே ஸ்வாஹா!' என்று சமர்ப்பித்தார்கள்.

அப்படியானால், யக்ஞம் என்றால் என்ன...? தியாகம்! வஸ்து தியாகம்! வஸ்துவை அக்னியில் சேர்த்து **அவனை** ஆராதிக்கிறோம்.

இது சாமானியமான விஷயம். எல்லா யக்ஞங்களிலேயும் இதுதான் நடக்கிறது. அதனால் பரமாத்மா சந்துஷ்டி அடைந்து, அந்தந்த யக்ஞத்துக்கான பலனை விசேஷமாகக் கொடுக்கிறான்.

ஆனால், இந்தத் தியாகத்தை பகவான் எதிர்பார்க்கவில்லை இப்போது.

எதை எதிர்பார்க்கிறான் அவன்...?

ஆத்ம தியாகம்! ஆத்மா என்கிற ஹவிஸை எம்பெருமான் திருவடியிலே சமர்ப்பிக்க வேண்டும். அதைத்தான் அவன் எதிர்பார்க்கிறான்.

தான், தனக்கு உரியன, 'நான் ஸ்வதந்திரன்' என்று எண்ணிக் கொண்டோமானால் பகவானுக்குப் பிடிக்கவே பிடிக்காது. எதைப் பொறுத்துக் கொண்டாலும் பொறுத்துக் கொள்வான், ஆத்மாபஹாரம் என்பதைப் பொறுத்துக் கொள்ள மாட்டான்.

அகங்கார மமகாரத்தோடு ஆத்மா தன்னுடையது என்று நினைப்பதை வெறுக்கிறான் பரமாத்மா.

யானும் என்னுடைமையும் உன்னுடையது என்று சமர்ப்பிக்க வேண்டும்.

அவனுடையது என்று இந்த ஆத்மாவைச் சமர்ப்பணம் பண்ணினால், அதை ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு அவனுடையதாகி விடுகிறது!

பர சமர்ப்பணம் - நம்முடையதல்ல என்று சமர்ப்பணம் பண்ண வேண்டும். பல சமர்ப்பணம் - அப்படி சமர்ப்பணம் செய்வதால் ஏற்படக்கூடிய பலனும் அவனுடையது என்று சமர்ப்பிக்க வேண்டும்!

அப்போது என்னாகும்...? 'நிர்பரோ நிர்பயோஸ்மி' என்று மார்பில் கை வைத்து நிம்மதியாக உறங்கலாம். ஒரு பயம், ஒரு கவலை கிடையாது நமக்கு.

(வளரும்)



"ஆபீஸுக்குள் மனு கொடுக்க வர்றப்ப வேட்டியைத் துவைச்சு கட்டிக்கிட்டு வரக் கூடாதா?"

"வேட்டில கறை இருந்தாதான் காரியம் நடக்கும்னு வெளியே சொன்னாங்களே!"

— சோழபுரம் யாக்கோப்

# 'சலிப்பு' பற்றி உற்சாகமாகச் சொல்கிறார் மௌனிகா!



## 'சினி பூ'

"'வண்ண வண்ண பூக்கள்' படத்தைத் தொடர்ந்து இரண்டு மூன்று படங்களில் நடித்து முடித்திருந்த நான், பூமியில் கால்கள் படாமல் கற்பனையூரில் நடமாடிக் கொண்டிருந்தேன். எல்லா தயாரிப்பாளர்களும் என் வீட்டு வாசலில் கால்ஷீட்டுக்காக காத்திருப்பதுபோல பகலிலேயே கனவு! அந்தக் காலத்து சாவித்திரி, சரோஜாதேவி ரேஞ்சுக்கு உயர்ந்துவிட்டது போல மிதப்பு. இதெல்லாம் ஒரு சில மாதங்கள்தான். பின்னர் என் கண்ணாடி மாளிகை நொறுங்கிப் போனது. "மௌனிகா இதுதான் உன் நிலை; நிஜத்தின் சூடு புரிகிறதா?" மனசாட்சியின் குரல். மனம் உடைந்து போனது. இது சலிப்புகூட இல்லை. சலிப்பின் விளிம்பு; அப்போதுதான் என் குருநாதர் வேணுகோபால் சுவாமிகளின் தீட்சை எனக்குக் கை கொடுத்தது. அது வேறு ஒன்றுமில்லை. ஆதிசங்கரர் சொன்னாரே அதேதான். "கடவுள் உனக்குள்ளேதான் இருக்கிறார். அவரை வேறு எங்கும் தேடாதே."

தியானத்தில் அமர்ந்தேன். உடல் சக்தி முழுதும் நெற்றிப் பொட்டில். மனசும் உடலும் இலேசானது "படவாய்ப்புகள் போகட்டும். தொலைக்காட்சித் தொடர்களை ஒப்புக் கொள். அதுதான் எதிர்கால மீடியம்." அம்மாவின் அனுபவம் பேசிற்று. ஆறேழு வருடங்கள் ஆகிவிட்டன. இன்று மிடில் கிளாஸ் குடும்பங்களில் தொலைக்காட்சி வழியாக நுழைந்து அவர்களில் ஒருத்தியாக ஆகிவிட்டேன்.

"இப்போது அடுத்த சலிப்பு, தொடர்களில் ஒரே மாதிரியான கேரக்டர்கள். தியாகம் செய்யும் பெண்ணாக, குடும்பத்தைக் காப்பாற்றுபவளாக, காதலில் தோல்வியுற்றவளாக... அந்த ரோல்களைச் சவாலாக எடுத்துக் கொண்டு நடிக்கிறேன் என்பது வேறு விஷயம். ஒரு மாறுதலுக்காக வித்தியாசமான ரோல் கிடைக்காதா என்று ஏங்கியவளுக்கு ஸ்ரீப்ரியாவின் 'மறக்க முடியுமா?' தொடர் கிடைத்தது.

"பாலுமகேந்திரா பள்ளியில் படித்த எனக்கு இலக்கியம், உலக நடப்பு என்று பரிச்சயம் உண்டு. அது தெரியாமல் என்னை ஒதுக்கி வைத்து விட்டுப் பேசும் மனிதர்களை நினைத்தால் சலிப்பு வருகிறது. ஆனால் எப்படிப்பட்ட சலிப்பாக இருந்தாலும், குருஜி வேணுகோபால் சுவாமிகளை நினைத்து தியானம் செய்தால் உற்சாகம் பீறிடும்."

— கௌசி

படம் : ராஜன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Pvt. Ltd. Editorial Team : C. Egnath Raj, Anuradha Sekhar, Jesudoss. Layouts : S.Stephen, P.R. Rajan.
Editor : Mrs. Seetha Ravi.
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# இரு திட்டங்கள் வழங்கும்
# நற்பயன்களைப் பெறுங்கள்

உத்தரவாதமான ஆதாயம்

வாழ்நாள் முழுவதும் பாதுகாப்பு

ஜூலை 22, 2002 அன்று
**அறிமுகம்**

**எல்ஐசியின்**

# ஜீவன் ரேகா

(அட்டவணை எண் 152)

**பண மீட்சி மற்றும் முழு ஆயுள்
காப்பீடுகளின் ஓர் ஒப்பற்ற சேர்க்கை**

குறித்த காலங்களில் ரொக்கமும், குடும்பத்திற்கு வாழ்நாள் முழுவதும் பாதுகாப்பையும் **ஜீவன் ரேகா** உறுதிப்படுத்துகிறது.

**சிறப்பம்சங்கள்**
☆☆☆☆☆☆☆☆☆☆☆☆

- **நற்பயன்கள் :** காப்பீடு ஆரம்பமான தேதி முதல் வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு 5 ஆண்டுகளுக்குப் பிறகு பாலிசிதாரருக்கு உறுதிப்படுத்தப்பட்ட அடிப்படை தொகையில் 10% வழங்கப்படும்
- **மரணம் சம்பவித்தால் :** உறுதிப்படுத்தப்பட்ட அடிப்படை தொகையுடன் காப்பீட்டிற்கு உரித்தான போனஸ் மற்றும் இறுதி கூடுதல் போனஸ், ஏதாவது இருந்தால், அதுவும் வழங்கப்படும்
- **போனஸ் :** வாழ்நாள் முழுதும் காப்பீட்டிற்கு சேர்ந்துள்ள போனஸ் மற்றும் இறுதி கூடுதல் போனஸ் ஏதாவது இருந்தால் அதுவும் சேர்த்து வழங்கப்படும்
- **விபத்துக்குரிய காப்பீடு :** இத்திட்டத்தின் கீழ் விபத்துக்குரிய காப்பீடு, மற்ற திட்டங்களுடன் சேர்த்து, ரூ.10 லட்சம் வரை உண்டு

மேற்கொண்டு விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள எல்ஐசி கிளையையோ அல்லது எல்ஐசி முகவரையோ அணுகவும்



**லைஃப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

வாழும் போதும், வாழ்க்கைக்கு பிறகும்

*Water is precious, conserve it.*

LIC No. 16/Tam/2002-03

Visit us at : www.licindia.com

Insurance is the subject matter of solicitation

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2002 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka

# 4 காயில் ஃப்ரீ !




மூலை முடுக்கெல்லாம் பாதுகாப்பு தரும் சுருள்.

Formula approved by




இப்பொழுது, மேக்ஸோ 4 கூடுதல் கொசு அற்ற இரவுகளை முற்றிலும் இலவசமாக அளிக்கிறது*! மூலை முடுக்கெல்லாம் பாதுகாப்புத் தரும் ஒரு ஒப்பற்ற ஸைக்ளோத்ரின்™ செயல் புரியும் மேக்ஸோவின் 10-காயில் அடங்கிய பேக்கை ஒவ்வொரு முறையும் வாங்கும் போது, கூடுதலாக 4 காயிலை பெறுங்கள்.

From the house of Jyothy Laboratories Ltd .

*இச்சலுகை ஸ்டாக் உள்ள வரையே

MAXO/143/2001/TAM